உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

தத்துவராயசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# மோகவதைப்பரணி.

இஃது

குழுத்தலை

வேதாந்தபாஸ்கரராய்விளங்கிய

மகா-ள-ள-ஸ்ரீ

சிவக்கொழுந்துமுதலியாரவர்கள்

குமாரராகிய

மகா-ள-ள-ஸ்ரீ

சிவ - சிதம்பரமுதலியாரவர்கள்

வேண்டுகோளின்படி

திரிசிரபுரம்

வித்வான்

மதுரைநாயகம்பிள்ளையவர்களால்

பிழையறப்பரிசோதித்து

ஊ. புஷ்பரதச்செட்டியாரவர்களது

கலாரத்நாகரம் என்னும் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

பிரபவஷு ஆவணிமீ

1927

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பதினேழாவது

# மோகவதைப்பரணி.

## கடவுள்வணக்கம்.

மதிபரிதியெரிநீர்கால்வானவனி
  யியமானன்வடிவாயெல்லா
வதிபதியுமாயனைத்துமாகியல்லா
  வறிவுருவையகத்துள்வைப்பாம். (க)

சொல்லாற்றம்மதிவிசோற்
  றூயதிதுதியதிதுவென்னுமாக்க
ளெல்லார்க்குமதுவதுவாய்நிறையிருக்கும்
  படியேயாயிருக்கவென்றே. (உ)

விழுமதிநம்பாவுலகில்வீடுபெற
  முயல்பவர்க்குவேதநான்குந்
தொழுமதிநம்பாலதெனவிளமதியொன்
  றணிந்தவனைத்தொழுதல்செய்வாம். (ங)

பேதமதியுளதாகிப்பிணங்குமதியிருள்போகப்
  பிறிதொன்றில்லா
வேதமதிசயமாகவிளம்புசிர
  திசயமதிவிளங்கவென்றே. (ச)

வேறு

கடியவினைமேவுகாயமனாதி
  கரணவசுரேசர்கணமெலா

முடியமறமேவிமுனியுமறிவாழி
முதல்வனிருதாள்கள்பரவுவாம். (ரு)

கலகமதனுதிபடையதிபராவி
கழியவொழியாதகருணையா
னுலகமிடர்மாறவுளதுணர்விவேக
வொளிநயனவாளியுதவவே. (சு)

வேறு

அகமுளரிதனினுதவுமகிலவுயி
ரகமுளரியகமறைகனுன்
முகமுளரியெனமுனிவர்மொழியுமுனி
பதமுளரிமுடியிலணிவாம். (எ)

எழின்முளரியொழியவருமிருமுளரி
யருளியிறையிருவினையெலாம்
விழிமுளரிகொடுபெருகிமொழிமுளரி
மலருநலன்மிகவிளையவே. (அ)

வேறு

துறைகூறுபடுமாறுசுழலாறுகனல்கானலொளியானநான்
மறைகூறுமதஞானமணநாறவருயானைவலிபாடுவாம். (கூ)

சலமாகைபலமாகமலைவாதில்லையாதுதமைநாடியே
நிலமாகவெனையாளிகழல்சூடியுளஞானநிகழ்வாகவே. (க0)

மதியாளிசமையாதிவழியாறுமிறுகாலின்மறுகாலிறுங்
கதியாகுமெனவாறுமுகமாகியருள்கானைகழல்பாடுவாம். ()

நவையாருமதுசாலநலனுகுமிதுவாதமெனுமாறுபோ
யிவையாவுமெமதாகியெவரோடுமவிரோதமிசைவாகவே. ()

வேறு

வதையுறாயில்வழுநறவுவிழைவுகள
வெனவொழுகுமயல்கணிணையுங்
கதையுமறவறிவருளுகமலமலர்வருகமலமலர்கருதுவாம். ()

ஒழியவருமுடலினுடனொருகலவி
யறவுதறியுயிர்களுணர்வோர்
மொழியவருமறுகலறுபதமதெனு முலகுகளின்முடிவுபுகவே.

வேறு

ஒன்றுமாய்வறநிற்பதில்லை
யுளத்தொழுங்கறயாவையும்
பொன்றமாய்வதுமுத்தியென்றருள்
போதியானடியோதுவாம். (கரு)

உரையுணர்ச்சியினுனிகழ்த்துவ
தொன்றுமற்றதுவாகவே
திரையெனப்பிறழ்கின்றசித்த
விகாரமானவைதீரவே. (கசு)

வேறு.

அகிலவுலகுயிர்கருவிவிளைபொழு
தடையமலர்வதுகுவிவதாம்
பகலுமிரவுமோர்பணியுமறவொளிர்
பரிதியிருகழல்பரவுவாம். (கஎ)

குரவனடியிணைமருவியுலகவர்
கொடியபவவிருள்கொலையுமா
றிரவுபகலறநிகழுமறிவொளி
யிதயவெளியினிலகவே. (கஅ)

வேறு.

கஞ்சமகளாய்நுகர்தல்காமுறுமுளத்தே
கலைமகளுமாயினியகற்றவருளத்தே
விஞ்சைமகளாய்விமலயோகியருளத்தே
விளங்குமொருமானடியுளங்குளிரவைப்பாம். (௧௯)

ஐந்துபுலனுக்குமிசைவாகவிறைபொற்ற
ளறுசமயநூலின்முடிவற்றபொருள்காண
வுய்ந்துபுகுமுத்தியையுடம்புடனுளத்தே
விளங்கிடவுளங்கையின்விளங்கனியையொத்தே (௨0)

கடவுள்வணக்கமுற்றிற்று.

வாழ்த்து.

வேறு

வாழிசொருபனெனையாளுகழறரணி
வாழவருதரணிவாழியே
வாழியெனதிடனாமாறவடிவுகொளு
வாழ்வுவருகுமனைவாழியே. (௧)

வாழிசொருபனடிசூடிநிலன்மிசையின்
வாழுமடியவர்கள்வாழியே
வாழியருளின்வழுவாதவறநெறிசொல்
மாசிறவமுனிவர்வாழியே. (௨)

வேறு

வாழிபழுதொன்றிலாமறைவாழியிறைதந்தவாகமம்
வாழிமுறைவந்தமாமனுவாழிபதினெண்புராணமே. (௩)

வேறு

ஒண்பொருளைநாடியிந்தநிலன்வாழ
வொண்டரளம்வாரியெங்கணுந்
தண்பொருளைவீசும்வண்குருகையாளி
தந்ததமிழ்வேதம்வாழியே. (௪)

9-1

வேறு

ஆரவாரமறவொருவார்த்தைசொ
லங்கணுனைநினைதொறுந்தங்கணீர்
வாரவாரவமுதருள்வாதவூர்
வள்ளலார்திருவாசகம்வாழியே. (௫)

வேறு

ஒழிவினருண்மாதுதிருமூலயினூறு
முணர்வுபரபோதவமுதணு
மொழியின்மணநாறவருளுமறைஞான
முனிவர்தமிழ்மாலைவாழியே. (௬)

வேறு

பாதமுடிதேடிருவர்பாலுமணுகாவொருவர்
பாதமலர்சூடியருள்பெரு
நாதன்மொழியானவனிவீடுபெறவோதுதிரு
நாவரசர்பாதமதுவாழியே. (௭)

வேறு

நினைவினரிதாகிநெறியினெளிதாகு
நிமலநிறைவானபொருளையோர்
வினையிறனிதூதமறுகிடையினேவு
விமலர்தமிழ்மாலைவாழியே. (௮)

வேறு

செடிகொண்மாயப்பிறப்பிருடீர்ப்பவன்
செய்யதாமரைப்பாதமுன்சேர்ந்தவெம்
மடிகள்சாத்தியவண்டமிழ்மாலைக
ளமலவாரியமாலைகள்வாழியே. (௯)

ஆ பாட்டு - உ௯.

வாழ்த்து முற்றிற்று.

## கடைதிறப்பு.

பண்ணார்மொழியமுதந்தருபவளந்திறவாதே
கண்ணாலுயிருண்பீர்கடைதிறமின்கடைதிறமின். (க)

உருவாய்வருபெருமானையுளங்கொண்டெவருடனுந்
திருவாய்மலர்திறவீர்கடைதிறமின்கடைதிறமின். (உ)

நீராவியின்முழுதுந்நிமலந்தானுமதிருகண்
ணீராவியின்முழுகித்தனிநிற்பீர்கடைதிறமின். (ந)

வேறு

அடையத்திரிபுவனத்தையுமளவற்றுளநயனக்
கடையிட்டயில்பவர்பொற்கடைதிறமின்கடைதிறமின். (ச)

மலர்பொற்கழன்மலரிட்டிறைமதியைப்பருகிடவே
சிலர்சித்திரமெனநிற்பவர்திறமின்கடைதிறமின். (ரு)

எளிவந்தருளிறைபொற்பதமிருகட்புலனுகரக்
களிவந்தவர்கனகக்கடைதிறமின்கடைதிறமின். (சு)

வேறு

தணந்தபோதுமுமைப்பெருதுதலைப்பதந்தருதம்பிரான்
மணந்தபோதுமுமைப்பெருதுமயங்குவீர்கடைதிறமினோ. ()

வேறு.

அகிலபுவனமுமுடையவனருளினு
னமரர்பெறலருமமுதினைநுகரவே
துகிலுமணிகளுநெகிழ்வுறவிழியுளே
சொருகுமறிதுயிலுடையவர்திறமினோ. (அ)

அரிமுனிடவுணுமமுதலவிதுபெரு
தவனுமலன்வருமமுதெனவமரர்தா
மெரிமுன்மெழுகெனவுருகினுமடியரா
யினியமொழியமுதருள்பவர்திறமினோ. (கூ)

வேறு

எஞ்சவுலகங்களமிர்துண்டகளிதன்னிறையோனிருகழற்
கஞ்சமலர்கொண்டகளிவிஞ்சவருவீர்கடைதிறந்திறமினோ. ()

மெய்தழுவவுங்கணிலை யுங்கலையும்வீழ்வுறவிரும்பியிறைமுன்
கைதொழுதநும்மையு மிழந்தருகுவீர்கடைதிறந்திறமினோ.

வேறு

சமயவிதமளவறவுளதுறைதொறு
தமரமிகவருகலைபலமொழிதரு
சகலவினைகளுமுதவியவுலகுறை
சரமுமசரமுமெனவருமுயிரவை
யமையுமுடல்கடோறுளவகமுளரித
னமருமகமெனமருவிமுனறைதரு
மகிலமுதவியவறிவனதடிபணி
யமரவனிதையரணிகடைதிறமினோ. (கஉ)

உணருமுனிகணமடிசயசயவென
வுரைசெய்துதியொடுதொழவளவறுசிர
முடையவுபனிடமுவகையோடுரைசெய
வுளமெய்யுணர்வதிசுகமொருகரையறு
புணரியொருதனதிடனெனவிதமுறு
புவனமுழுதையுமமுதுசெய்தறிதுயில்
பொறிகொளரவணைமிசையமர்பரனடி
புகழுபுனலரமகளிர்கடிறமினோ. (கங)

அசையுமுடலினினுரவியநெகிழ்வன
வவனிபுனல்சுடுவனவசைவனவன
லனிலமிடைவெளிககனமுனுருவல
வறியுநயனமுமுருவறிகருவிய

திசையுமொழிபுலனவைமனமுதல்களு
மிணையவுயிரதுமுழுவதுமறிவல
வெவையுமறிவறிவுருவெனுமிறைகுண
ரசிதவராயரமகளிர்கடிறமினே. (கச)

உதையவராயரமகளிரொமிரவிமு
னுடுவுமவரதிபதியெனுமதியமு
மொளிர்வதிலருலகிருள்கெடுவதுமிவ
னுதயமுறிலிவனலதிலதிறையென
விதயவெளியினினிலைபெறுமறிவுரு
விரவுபகலறுமிரவிமுனிகழ்கில
னிவனுநிகழ்வதிவ்விறையொளியினிலென
விவரரகும்வனிதையர்கடைதிறமினே. (கரு)

பரவுபுகழ்பழிபெறலிழவுறவயல்
பதுமைபுணர்வவள்பிரிவுறலுகலுயிர்
பலவுநிலைபெறனிதனமெனிதினொரு
படியுமகிழ்வறநிகழுளமுடையவர்
வரவுதிரிவறுநிறைவுறுமறிவுதம்
வடிவதெனவனுபவமுளமுனிவரர்
மதுரமொழியமிர்தினைநுகர்வுறவுள
மகிழும்வனவரமகளிர்கடிறமினே. (கசா)

வேறு

வீரஞ்சிறந்தசிலையநங்கவேளைவெங்கண்டருளியவோங்
காரஞ்சிறந்தகனதனத்தீர்கனபொற்கபாடந்திறமினே. (கஎ)

நல்லாதரத்துமைந்தர்க்குநாவாலன்றிநயனத்தாற் [னே.
சொல்லாதெல்லாஞ்சொல்லுவீர் சுடர்பொற்கபாடந்திறமி

ஐயங்கொண்டுநெடுத்தேடியறிவோரறியப்போதமணஞ்
செய்யுங்கொங்கையருளுவீர்செம்பொற்கபாடந்திறமினே.

கன்னிநாடுஞ்சோணாடுங்கவலைதீரும்வகைவந்தென்
சென்னிநாடும்பதம்பாடச்செம்பொற்கபாடந்திறமினோ. ()

வன்னியன்னவிறன்மோகன்மாளவந்தமலர்ப்பதத்தென்[னோ
சென்னிகொண்டபிரான் வென்றகளம்பொற்கபாடந் திறமி

கடைதிறப்பு முற்றிற்று.

ஆ பாடல் - ௫௦.

---

## காடு.

எனையாளவுருவாகிவருகோல
வருண்மாதுமவள்பேயும்வாழ்
நினையாமுன்மனன்வேவ
வழன்மேவுமொருபாலைநெறிகூறுவாம். (க)

மண்மாளுநீர்மாளுமெரிமாளும்
வலிமாருதம்மாளுமேல்
விண்மாளுமாளாததொன்றில்லை
நிலையாமையழல்வேவவே. (உ)

இருடாவும்வன்னெஞ்சர்நன்னெஞ்ச
மொன்றில்லையார்கண்களுங்
குருடாய்விடுந்தியகடமண்டுகோபக்கொடுந்தீயிலே. (௩)

எத்தீயிலுங்காமவெந்தீகடஞ்சேரிடும்பைக்கெலாம்
வித்தீயுமதுசாடரத்தீயுமவ்வாறுமேல்கொள்ளுமே. (௪)

நாசஞ்செய்பவவன்னியழலாறவருண்மாதிருமங்களா
நேசஞ்செய்மொழிமாரிபொழிபோது
மொருகண்ணுநீரில்லையே. (௫)

காயத்திலுயிர்காலவனல்வெளவு
மழல்மாறநிழல்கண்ணிதன்
னேயத்தினருள்செய்யபாதத்துவர்க்கன்றிநிழலில்லையே. ()

வேறு

குறுகினண்டரழிவனொன்றுமொழிவதென்கொல்கொடியதி
முறுகினண்டமுகடுகொண்டமுளரியானுமுனியுமே. (எ)

கருகியிந்துநிறனழிந்துகடமெழுந்தகனலிலே
யுருகியந்தவரியுமென்றுமுததியின்கணுறைவதே. (அ)

கலையிலங்குமரனையும்பர்கடவுளென்றுவிடுகுதோ
மலையினும்பர்புகினுமண்டுமதனவங்கிவிதனமே. (௯)

தரையினின்றவவையினும்பர்தருவுமில்லைசுசதர்த
மரசுமில்லையுரைசெய்பந்தவனலிலெங்குமழியுமே. (௧0)

அழியுமிந்தவனலினெந்தவுலகுமென்றவருகர்தா
மொழியுமந்தவருகர்பிண்டிமரமுமில்லைமுடிவிலே. (௧௧)

வேறு

உள்ளிற்பாதிப்பொழுதும்பிரிந்திரோ
  னென்றுண்பேய்க்குரைக்கும்பேய்க்
கள்ளிப்பாவையல்லாலோர்கள்ளிப்பாவையில்லையே. (௧௨)

பொருவிறந்தவானவரும்புகன்றவிந்தக்கடத்தீயை
வெருவியன்றேயிறப்பில்லாவெளியாம்வீடும்விரும்புவதே. ()

வேறு

உன்னவரிதாயதிருவுருவுதன்னை
  யுணருமதிமானொழியமானுமில்லை
பன்னுகலையொழியவொருகலையுமில்லை
  பரமாம்ஸமென்பதல்லாற்பறவையில்லை. (௧௪)

பெருகிவருதிருவுள்ளக்கருணைநீரும்
  பேணுமடியவர்தமதுபெருகுமன்பா
லுருகிவருகண்ணீருமில்லையாகி
  லுலகிலுயிருய்வதற்கோருபாயமுண்டோ. (௧௫)

9-1

வேறு

தம்பிரானிருசெங்கமலப்பதந்
தங்கிடாமனனேயித்தழல்வன
வெம்பிரானையுன்னுதவுயிர்களே
யிவ்வனத்திலியங்கிடும்பேய்களே. (கரு)

காடு முற்றிறு.

ஆ பாட்டு - ருரு.

---

கோட்டம்.

துப்பிலாவலகைக்கணஞ்சேர்புறஞ்
சோலையைச்சிலசொல்லினஞ்சொல்லுதற்
கொப்பிலாளுறைகின்றவுட்சோலையை
யுரைப்பதன்றதுவுஞ்சிறிதோதுவாம். (க)

தாயும்பூதலத்தென்னையுமாண்டுகொ
டம்பிரானுமடியருமல்லது
பேயும்பூதமுந்தேவருமற்றும்
பிறக்கும்யாரும்புகுதப்பெறுர்களே. (உ)

வேறு

வெந்துதாபதர்கடாயுதரவெந்தீயினுல்
வந்துதாபமறுநீழலவண்மந்தாரமே. (ந)

மெய்ம்மையேபெறவிரும்பியடிமேவில்விளையத்
தம்மையேபெறவழங்குமவள்சந்தானமே. (ச)

பாரிசாதமுடனும்பர்பலமுந்தருதலாற்
பாரிசாதமெனவும்பர்முனிவோர்பகர்வரோ. (ரு)

ஏமநல்குறவிரந்தவர்களெல்லையில்பரந்
தாமநல்குமரிசந்தனமெனச்சொறருவே. (சு)

கற்பகந்தருவதக்கலைகடந்தபொருளே
கற்பகந்தருவதக்கலைகடந்தபொருளே. (எ)

வேறு

பிறிவழியின்றியுருகியநெஞ்சுபெருகியவின்பவுருவையே
பொறிவழியின்றிமலர்வனநின்றுபுலனெனுமைந்துதருவுமே.
மலர்தருபஞ்சதருமதுவின்பமறிகடலென்றமறையெலா
மலரவனந்தன்மகனரனின்பமதிலொருவிந்துவளர்வதே. (கூ)

வேறு

யாதுநாசமுறவழிவொன்றிலா
வின்பமாய்விளைந்தென்றுந்தருணமா
யோதுநாலுமறையின்கொழுந்தின்மே
லுள்ளஞானக்கொழுந்தொன்றுமோங்குமே. (க0)

முடிவிலாப்பெரும்பாழாஞ்சராசர
முற்றுந்தீயவுமற்றெனையாள்வகை.
வடிவிலான் வடிவாகிவருந்திரு
மாதுபார்க்குங் கழுநீர் மலருமே. (கக)

வேறு

பத்தியாங்கடற்கேன்றுமோர்
பாவைமுன்றிலிற் சங்கநன்
முத்தியாம்பெறவழங்குமே
முன்னைநான்மறைமுழங்குமே. (கஉ)

மொழியினுலளப்பரிதெனுமுளரிநல்குமுத்தேவரு
மழியுநாளினுமழிவிலாவளவிலாதமர்நிதியையே. (கங)

வேறு

தொந்தமிலாவுளமென்றுமொழிந்தன
சுருதிகள்சொல்லளவா
வந்தமிலாதவகண்டனுடம்மையமர்ந்திடுமோலையமே. (கச)

விடலிலமேவரும்வேதவிழுப்பொருடனைவிடலில்லடியா
ருடலிலமேயெனவோதினன்வாதநல்லூரனுவப்பினொடே.

வேறு

அண்டமெலாந்தன்னுடையவகத்தடக்குந்
திருமேனியம்மைக்கொக்க
வுண்டெனலாவதுகோயிலன்பருள
மல்லதுவேறுலகத்துண்டோ. (கசு)

செழுந்தரளவடமன்றியகிலாண்ட
வடமணியுந்திருவேயம்மா
தெழுந்தருளுந்திருவாசலிருசெவியா
மடியவரோபெரியார்யாரோ. (கஎ)

என்றுமதியெரியலகைக்கிடும்விளக்கா
மன்னைதனக்கெல்லாருள்ளு
மொன்றுமதியாந்தன்னையொழிய
வவியாதவிளக்குலகத்துண்டோ. (கஅ)

கோட்டம் முற்றிற்று.

ஆ பாடல் - அச.

---

தேவி.

தாயிலும்வந்தெனையாண்டதம்பிரான்
மலர்ப்பாதந்தரித்தோருள்ளக்
கோயிலுவந்தருளியுறைகோமளத்தின்
திருமேனிகூறலுற்றும். (க)

வேறு.

முதியலோகமீரேழின்முளரிவாழுமுதாதை
முதல்பிபீலிகாதேகமுடிவதாகமேல்கீழ்செய்

மதியும்வாழ்வும்வாணுளும்வலியும்வேறுவேருகி
வருமநேகமாகோடிவடிவிலேகமாயோளே. (உ)

நகிலுமாதர்வேல்போலும்விழியும்வாணிலாவீசு
நகையுமோவிடாதோதிநரகினுளும்வீழ்வேணை
யகிலமாதரார்கேதமகலவாளவோர்மேனி
யகிலநாதர்தாமேவவருளுகாதல்கூர்வாளே. (ரு)

நயனநீரொடோவாதுநதிசெய்நாதர்சீர்பாத
நளினகீதநாவாரநவிலுவார்கடாமார
வயனுமாலுமேருளுமவனுநாளுமாராயு
மழிவிலாதவோர்போதவமிர்தபானமீவாளே. (சு)

நிலனில்வானில்வாழ்வோதநிலேயிலாமைதாநாடி
நிகரில்வீடுசேர்போதநெறிகள்போலவேகூறு
சலனவாதில்வீழாதுதமையலாதுதேடாது
சமதமாதிசேர்வார்கடலேயின்மேவுதாளாளே. (ஏ)

வேறு.

அடியவரளவறுபிறவியச்சம
தறவருளியபதமறியுமித்தனே
முடியறிவுறமுயல்பணிபவர்க்கிலே
மொழிமுடிவெனமறைமுடிவுரைக்குமே. (சு)

அலர்மணமுறைபொருண்மணியதிற்பிரபை
யவையிவர்நிகரெனமிகவுரைப்பதோர்
கலவிசெய்தொருவடிவுறமதற்செறு
கடவுளைமருவியகனதனத்தளே. (எ)

அருவெனவுருவெனநிகழனைத்துமோ
ரணுவெனவவளொருதிருவுருக்கொளு
முருவிணையணுவினிணுவெனக்கொளு
முணர்வரிதவள்செயுமொருநடத்தையே. (அ)

வேறு.

நிகழுமுலகினிலகிலவுயிர்விழியுநிகழவொளியே
திகழுமெரிமதியிரவிதிகழுமொளிதிருநயனமே. (கூ)

கவியுமிகுககனவொலியுலகினுயிர்கருதும்வகையே
செவியினுருதிசைகளையுமுதவுமவள்செவிமலர்களே. (க0)

நவமணியுமிறைவிதிருவுருவினொளியுடனவிலலா
முவமமலவுலகினுயிருணர்வுணருமொளியவொளியே. ()

கருமுதலைகவரவொருகரியதுயிர்கழிபொழுதிலே
யொருமுதலைநினையவிருள்கிழியவருமொளிதிகிரியே. (க௨)

கருமிடைசெய்பலகரணவவுணர்நிசிசரர்கணனெலா
முருமிடியினரவினமுமறமுழவுமொலிபணிலமே. (கூ)

வேறு.

கறுக்குநிசிசரன்செவிவாய்முதன்
ஞானகருமங்களெனவே
யொறுக்குமொருபதுசிரமுமுருள
வொருகணையிறைவிதனுவுதவுமே. (கச)

வேறு.

ஊனவடிவாளவுணர்கொடிபடை
சாயவொழியாதொளிருமெய்ஞ்
ஞானவடிவாடனதுஞானவடி
வாண்மிகுநலன்பெருகியே. (கரு)

முத்தண்டுமொருதண்டுமலவெய்ய
விறன்மோகனெனுமந்தக

னுத்தண்டமொழிவிப்பதுணர்வின்ப
வுருவானவொருதண்டுமே. (கசு)

வேறு.

ஒழிவிலுலகெனுமுருவினிறையவ
ளுரகவணைமிசையணைவதே
யழிவிலறிவெனுமுருவினலமிகு
மடியரகமலரமளியே. (கஎ)

எந்தவளவறுமண்டமணுவென
வண்டமெனவணுவிசையுமா
தந்தவளவமைகின்றதடியவ
ரம்பொனகமலரமளியே. (கஅ)

அயர்வுநினைவறுமகமென்மலரினி
லகிலபுவனமுமில்லையே
யுயிருநிகழ்விலைபரமுநிகழ்விலை
யிறைவியுணர்வொளியுள்ளதே (கக)

வேறு.

அடிசூடுவாரடியா
ரமரர்முடியவர்கோவின்
முடிசூடப்பெறுவதுவோ
பெறிற்பெறுவார்மூவருமே. (உ०)

மொழியின்மொழிமொழிவனருண்
முதல்வியடியாரொழியப்
பழியின்மறையறியுமோ
பதம்பணிந்துபாடவே. (உக)

வேறு.

காரணனேமுதலாகவைதீர
வுலகங்காப்பவரைக்காக்குஞ்

சிரணங்கின்பதமொருகாற்
பிரியாநல்லன்பர்களேதிருமெய்க்காவல் (உ௨)

ஒன்பதுதீர்த்தமுமன்பர்தம்பாதம்
விளக்கியநீர்க்கொவ்வாதென்றே
யன்பர்கடங்கண்ணீர்கொண்
டம்மைக்குமஞ்சனனீராட்டுவார்கள். (உ௩)

வேறு.

யாப்புச்செய்யவலங்கலுமாடையு
மெனதுநெஞ்சுசெஞ்சாந்தமிருகரங்
கூப்புச்செய்கையணியென்றுகூறினன்
குருகையாளிமற்றூர்வல்லர்கூறவே. (உ௪)

புகலுமாறரிதாகியபூவைக்குப்
பூதபௌதிகமாகிப்பொலிந்திடு
மகிலமாவிபரமிவையன்றியே
யண்டருண்ணுமமுதோவமுதமே. (உ௫)

தேவி முற்றிற்று.

ஆ பாட்டு - ௧0௧.

திருச்சிற்றம்பலம்.

---

ஆல்.

சிவனிடங்கொடிருமாதமர்ந்தருளு
தெய்வவாலமுளதென்றுமுன்
னுபநிடங்கள்பலவோதும்யானும
துரைக்கலாமளவுரைப்பனே. (௧)

வேறு.

ஆனமுதலின்கணேயடைய வாதியிறைபண்டைநாலுமறை
யாயவரிதென்றவீடுவிளையாடியருள்கின்றவோர்மொழியில்

வானமுதலைந்துபூதமிய மானனிகழ்சந்த்ரசூரியரு
மாயவருமன்றுமோதுமொரு வாதையறநின்றுநீடியது. ()

ஆயபலவும்பர்வானமிடை யானநிலனம்புராசிமலை
யாழமுறநின்றபாதலனு மாகவிவையைந்தினேழுமவை
மேயபலவும்பராதியென வேறுபடவந்தயோனிகளு
மேவுசகதண்டகோடிபல வீழவெழநின்றசாலையது. (௩)

நாலுமறையங்கமாறுசிவ னாரணன்விரிஞ்சனுமகில
நாயகர்விளம்புமாகமமுநாடுபதினெண்புராணமிறை
கோலமறைகின்றகீதையிதி காசமுடனன்பராவிகளி
கூரமொழிசெஞ்சொன்மாலைபல கூறுகிளிதங்குகூடுளது.

ஒருவமையன்றிமேவுபர லோகமுறைகின்றவீடுமிறை
யோனையெதிர்கண்டுவாழவரு மோரளவிலின்பவீடுமவ
னேருவமையென்றவீடுமொரு
நீர்மையுறவொன்றும்வீடுமிவை
நீதிபெறவெம்பிரானருள நேயமோடிருந்தநீழலது. (௫)

னேருவமையென்றவீடுமொருநீர்மையுற
வொன்றும்வீடுமிவை.

வானுமிறைவன்சதாசிவனு மீசனுமியங்குமாருதமும்
வாளெரியுமும்பனுமரனும் வார்புனலும்வெங்கணுகணையி
னுனுநிலனும்பிதாமகனு மாகவருமைந்துபூதமிவ [தே.
ராயதனுவின்ப்ரமாணமினி யாவினளவென்கொலோதுவ

வேறு

சொன்னவாலினின்னவூச லெல்லைசொல்லவில்லையா
மன்னவாகனத்தரெல்லை சொல்லவாகினுகுமே. (எ)

ஆல் முற்றிற்று.

ஆ பாட்டு-ககசு.

---

## பலிபீடம்.

அண்டபலகோடிகளா லாரணபண்டிதரமைத்த
பிண்டபலியிடும்பெரிய பீடிகையார்பேசுவார். (க)

ஏத்தாநின்றிடுநாவோ டிணையடிவீழத்தலைகள்
கூத்தாடவுடலமுயிர் பலிகொடுப்பார்கோடியே. (உ)

வேறு.

தம்பிறவிவேரொடுதெறிக்குமிறை
தேவியிருதாடலைகடாங்
கும்பிடலொழிந்துபயனின்றி
விளையாடுவகுறைத்தலைகளே. (ங)

வாளெரியினிட்டபசுவாவிமகிழ்வுற்றிறைவி
வானலகைகைக்கொளுமதே
யாளநலனுற்றறிஞர்ஞானவெரியிட்டபசு
வாவியிவள்கைக்கொளுமதே. (ச)

நிலாவருமுகத்தினிலாவியவிழிக்கடை
நிலாதுயிரறப்பருகியே.

யுலாவரவரத்தனியுலாவருவர்மெத்தென
வியோகினிகள்சிற்சிலவரோ. (ரு)

வேறு

மருங்கிலாவகைவளர்ந்த தனங்கொண்டுவையமுயி
ரொருங்கெலாமொருங்கும் வகையோகினிகளுலாவுவரோ
அப்பொழுதைக்கப்பொழுது மதிசயமாமதுவேகொண்
டெப்பொழுதுமதிசயமா யிருப்பரிடாகினிகளே. (சு)

வேறு.

இருணகைக்கிளைகொடுத்தெழிலுருக்கொடுசகத்
தருணசைக்கிடனறுத்தொளிர்வர்யோகினிகளே. (எ)

பகலுமத்தமுமறப்பரமதத்துவமுறச்
சகலவத்துவுமெடுத்தயில்வர்சாதகர்களே. (அ)

வேறு.

அகிலமுமறவிழிந்ததாளுடையா
ரளவறிவாலுயர்ந்தநீண்முடியார்
பகலிருளறநிறஞ்செய்மேனியினர்
பலிகொளவுலவுமந்த்ரபைரவரே. (கூ)

அணிமுடியளவிறந்துமேவினரா
லணிமலர்பெரிதுவந்துசூடுவர்நீள்
பணிமுடிதரவிழிந்ததாளவர்சேர்
பரிசுறவருள்வர்மந்த்ரபைரவரே. (க0)

கரியினுநிறனிருண்டபேய்தொழுவே
கருணையிலிரவியிந்துதாரகைவா
ளெரியொளிகெடவிலங்குபேரொளியா
யிலகுறவருள்வர்மந்த்ரபைரவரே. (கக)

கலகலெனநனிசிறந்தபைரவர்நீள்
கலைகளினொலியடங்கவீவகைபூ
தலகலிகெடவியைந்தகிதமொடே
தமருகவிசைவழங்கியாடுவரே. (கஉ)

பழகியவுடலமிந்தியாதியினோர்
பணியறமதிவழங்குநாதர்கள்பே
ரழகியகருணைகண்டுநீள்விழியா
லருவிகள்விடுவர்நின்றுசாதகர்களே. (கங)

வேறு.

அகிலசகமறையும்வகையளவில்சுகமதுநிறைய
வமுதுசெய்துதாம்

பகலிரவுதெரிவதறவிலகுமுரு
 வுடையர்சிலபைரவர்களே. (கச)

எம்மையருள்செய்கெனவிரந்தவவர்
 கட்கினியபைரவர்கடாங்
தம்மையருள்செய்குதலினுைப்பர்தமை
 யாளுடையதத்துவனையே. (கரு)

வேறு

ஏறுமயிடன்றலைதுணித்தியமன்
 வென்றசிவயோகினிகண்முன்
சீறுமயிடன்றலைதுணித்ததொரு
 தெய்வமயிலிற்றிகழ்வரோ. (கசு)

வேறு

சாலவரிதென்றுநாலும்மறை யாயிரமுகங்களானவுயர் [ர்
 சாகைபலகொண்டுதேடநனி தாரணியுள்வந்துதான்மனித
போலவெளிவந்தநாதனிரு பாதமுடிகொண்டுபூமியிடர்
 போகவெனநின்றிடாகினிகள் போதமதுவுண்டுபாடுவரே.

ஞாலவமுதுண்டுவேகபுலநாகஙடஙின்றுகால்வளைய
 நாடிமனவன்கன்மேவுமுயிர் நாசமுறுமந்தகாரமதி
யாலமமுதுண்டுநாடரிய வாதியிறைபண்டைநீதியிவை
 யாகுமெனவன்பர்காணவிளை யாடுவர்கணங்களுயகரோ. ()

பலிபீடமுற்றிற்று.

ஆ பா கஙரு.

---

பேய்.

போதமாம்வடிவுள்ளவாறனு போகமாகுதலின்றியே
பேதமாகியவாதமேபகர் பேய்களைச்சிலபேசுவாம். (க)

வேறு

நீதிகணபங்கமேநிலை யானவுயிரும்பன்வானிலை
 நீரினதொழுங்குபோன்மதி நேரறவியம்புவீடிறை
போதிநிழலின்கணோதிய போதநெறியென்றுவாதிகள்
 போரின்மிகவென்றுசிவர போர்வைபுனைகின்றபேய்சில. ()

ஏதமுளதின்றநேகம தேகநிலைநின்றிடாதுட
 லேதனளவின்பவீடுல கேழின்முடிவென்றமாறுகள்
பேசுமருகன்றனுனெறி பேணியுடையின்றிநாடவர்
 பேயெனவியம்பவோர்துடை பீலிகொடுநின்றபேய்சில. ()

நாடுபரனன்றிதீவினை நாகநிரயங்களாருயிர்
 நாசபவபந்தவீடெனு ஞானமவமென்றுமாம்வழி
தேடுபொருள்கொண்டுநாரியர் சேறடிபொருந்தவீடிது
 தேவர்குருவின்றன்வாய்மொழிதேறுமெனநின்றபேய்சில.

நாதனறிவென்றுமாமறை நாலின்முடிவெங்குமோதிய
 ஞானநெறிகண்டும்வீடுற நாளுநினைவின்றிநீள்வினை
வேதநெறியென்றுமீள்வறு வீடுபிறிதின்றிவானக
 மேவுமிதுவென்றுநாடொறும்வேள்விசெயநின்றபேய்சில.

ஆனவுடலிந்தியாதிக ளாடுமனபுந்திமானத
 மாருயிர்கள்பந்தவீடுக ளாதியிறையென்றபேதமும்
வானமுதலைந்துபூதமு மாகர்முதல்வந்தயோனியும்
 வாழுமயனண்டகூடமு மாயையெனநின்றபேய்சில. (சு)

ஆழிவளைகண்டதேகுறி யாகவிழிகின்றசாதிக
 ளானுமவருண்டசேடம தார்வமுடனுண்டும்வேறில
னூழியுலகுண்டகோன்முழு தாகுமெனுமின்பமார்குரு
 கூரன்மொழிகண்டும்வேறற வோதிமயல்கொண்டபேய்
  [சில.

நாதனருள்சண்பையான்மறை ஞானமுனிபண்டுபாடிய
நாலுமறையந்தநீதியை நாடிஞெருகிஞ்சின்மாணிகழ்
பேதமதுகண்டபோததி பிரீதியெனநின்றதாமொரு
பேறுமிழவுங்கொளாமிகு பேதமறைகின்றபேய்சில. (௯)

ஆதிமறையந்தநீதியை யாயவறிகின்றபோலமுன்
மாயவறிவின்மையால்வரு மாகதிசைநின்றனேகமு
மோதுபரனென்றுவீடுறு மியோகதிசையின்கணேகமு
மோதிமறையெங்கள்பாலவி ரோதமெனநின்றபேய்சில.

ஆழியுலகங்கள்வீடுற வாரணம்விளங்கவோதிய
வாதியிறைசந்த்ரமௌலியை யாடலதுகண்டகோம்ளம்
வாழிசகதண்டநாயகி வாழியெனவின்பமாமகிழ்
வாசநறவுண்டுதாமதி மாறிவிழுகின்றபேய்சில. (௧௦)

மேலிரவியிந்துசேய்புதன் வியாழன்வெளிமந்தனீரறு
மேடமுதல்வந்தராசியை வேறுபடலின்றிநாளெழு
நாலில்வருகின்றவாறுக ணுசநிகழ்சிந்தனுதிக
ணுடியறைகின்றசோதிட நாளுமறைகின்றபேய்சில. (௧௧)

வேறு

முனிக்கணமெலாமனிதர் பந்தமுறவீடுபெற
மூலமிதுவென்றுபகரு
மனக்கடவுளானசெழுமதியொழியவேறுபர
வத்துவிலதென்றசிலபேய். (௧௨)

விண்ணவனியாவையும் விளங்குவதுமற்றவ
னெழுந்தருளின்மேவுமுயிரின்
கண்ணவனலாதுபிறிதில்லைகதிரோனலது
கடவுளிலதென்றசிலபேய். (௧௩)

மாலயனுருத்திரன்மகேசுரர்சதாசிவரு
மற்றுமுளதேவருமெலாங்
காலவசராயழிதலாலழிவிலாமலுள
காலமிறையென்றசிலபேய். (கச)

யாவருலகத்துவினைவெல்லவுரியாரமரர்
யாவருமிறைஞ்சுமொருமுத்
தேவருமொழிந்திலர்கள்செய்தவினையன்றியொரு
தெய்வமிலதென்றசிலபேய். (கரு)

அந்தரமியங்குனரும்வருவரரியாளியர
வாதிகளுமஞ்சுமுலக
மந்திரவசத்திறைவனென்பதுவுமற்றதனை
யென்றுமயலுற்றசிலபேய். (கசு)

முத்திதரவோதுமிருமுச்சமயநூலுமறை
நான்முழுவதுந்தருவதாஞ்
சத்திதருமந்திரமுமெப்பொருளுமாகுவது
சத்தமெனநின்றசிலபேய். (கஎ)

வேறு

வழுத்தித்தற்பசியாற்கவிபாடுனர்
வழுச்சொற்சொற்றறியாத்தனமோதுதற்
கெழுத்துச்சொற்பொருளியாப்பலங்காரமென்
றிவற்றைக்கற்றிறுமாப்புறும்பேய்சில. (கஅ)

படித்துப்பற்பலநூல்களுந்தாமுறு
பசிக்குக்குத்திராயிரந்தார்கையிற்
பிடித்துப்பிச்சையிடாரகம்போயவை
பிதற்றிப்பக்கமுணவரும்பேய்சில. (கக)

வேறு

ஊழைக்கழியச்சிலகாலமிருந்
துண்ணக்கருதுற்றுடலத்துளவங்
கூழைக்குமிழிட்டுமுகந்ததனைக்
கும்பித்துவிடுஞ்சில கூளிகளே. (உ0)

கடவாளரிகோமுகம்விரமலர்க்
கமலம்மயில்பத்திரசோத்திககுக்
குடவாதனமென்றிருகைகொடுகால்
கோணிப்பழகுஞ்சிலகூளிகளே. (உக)

தீதாமலனென்றுணராதுடலைச்
சேமிப்பவைதானதிலுவல்சிக்
கோதாமலனும்மெனநல்லறிவோர்
கூறத்திரியுஞ்சிலகூளிகளே. (உஉ)

மூலந்திகழுங்கியுருக்கவிழு
முடிசேரமிர்தத்துளிமுத்தொருசெங்
கோலந்திகழ்தந்துவினூற்றதெனக்
கோள்கொண்டயருஞ்சிலகூளிகளே. (உங)

தோயத்துலவச்சுடுவெங்கனலிற்
றேயச்சுரர்சாதிகள்போகியவா
காயத்துலவக்காயத்தைவிடக்
காயத்திலுறக்கற்குஞ்சிலபேய். (உ. ச

ஆடம்பரமாமறுமைத்துணையா
மரணைத்தமகத்தொழியப்புறனே
வேடம்பலகொண்டுநடித்துழலும்
வேதாளகணங்கள்விதம்பலவே. (உரு)

வேறு

கடியவாயவினைபலகத்துவ
கொடியவாயனகொள்ளிவாய்ப்பேய்களே. (உசா)

பேய் முற்றிற்று.

ஆ பாட்டு - கசுக.

---

தொழில்

ஏதுகோடியளவென்றிப்பேய்களுக்
கோதுவோமிவற்றின்செயலோதுவாம். (க)

வேறு

அமையக்கற்பதுவிட்டுச்சிலதர்க்கித்தமையாச்
சமையக்கத்தநுகத்தித்தலைமுட்டிக்கொளுமே. (உ)

பொருதர்க்கப்பரபட்சச்சமயத்தைப்பொரவே
விருதிட்டுப்பொருதிட்டுத்தனைமெச்சிக்கொளுமே. (ங)

சயமுற்றுப்பொருண்முற்றுத்தமிழிட்டுச்சொலவா
ரியமிட்டுச்சொலவொட்டொட்டெனவட்டித்திடுமே. (ச)

சொனவத்தத்தினைமுட்டத்தொடரக்கெட்டுனையான்
வினவத்தட்டிலதர்க்கத்தெனவெட்கிச்சொலுமே. (ரு)

உனதர்க்கப்பொருள்பத்தெட்டுளதட்டிப்படியே
யெனதர்க்கப்பொருளிற்றட்டிலமுத்திக்கெனுமே (சா)

பரிசுத்தப்பொருளொற்றத்துவசித்தத்துவமே
துரிசுற்றுக்கெடுமித்தைத்துணிசித்தத்தெனுமே (எ)

தலையிற்சொற்கடையிற்சொற்பொருளொக்சத்தழுவா
மலையச்சொற்கெடவத்தத்தினசொற்கட்டிடுமே (அ)

துணிவுற்றத்துவிதத்தைத்துவிதத்தைச்சொலவே
பணிவுற்றுத்தணிவற்றிப்படிதுக்கப்படுமே (௯)

குருதர்க்கத்தினில்வெற்றிக்கொடியிட்டுக்கொளுமே
யொருதர்க்கக்கமுதைச்சொற்றெருதர்க்கத்தழுதே. (௧௦)

தெரிசித்துப்பரிசுத்தப்பொருள்சித்தத்துறவா
தெரிசித்தத்தொழுதர்க்கித்திடுமெற்றிப்படியே. (௧௧)

வேறு

அறவுரைகளவையெனவுமிவையெனவு
மலகையுடனலகையிகலிச்
செறவுறைசெய்பலகலையினெலியினுயர்
ககனமுடிசெவிடுபடுமே. (௧௨)

தொழில்முற்றிற்று.

ஆ பாட்டு ௧௪௩

---

உவமை.

கன்றினவுளத்தொடுகளத்தினி
னரம்புகள்பரம்பவமையா
தொன்றினுரையொன்றுரைசெயாதகலை
யோதலகையொப்புரைசெய்வாம். (௧)

வேறு

நன்னலத்தபரஞானவிற்கவினை
நல்லறப்பயனைநச்சுபேய்
கன்னலைக்கழியவிட்டதற்றகழி
கோதுகொள்பவர்கடுக்குமே. (௨)

உட்கிடந்தமலனெழிவுருதுபுனல்
கொண்டுடம்புகழுவுற்றபேய்

மட்குடந்தனின்மலத்தை தவைத்தது
புறந்துடைப்பவனைமானுமே. (ங)

அறங்கொணெஞ்சொழியவலகையன்பினொடு
கட்டுகின்றவழகார்மடம்
புறங்கொள்செஞ்சடையகங்கொள்காமவெறி
போதருந்தகைமைபோலுமே. (ச)

தன்னினையறியநின்றமானமவை
கொண்டுதன்னதருநாடுபே
யுன்னினுவமைபாதவங்கொடெரி
பாவகற்சுடுதலொக்குமே. (ரு)

துதித்தலென்குருவும்யாமுமோரறிவ
தாகுமென்றுவினைசூழவே
மதித்தபேயுதவுநன்றிகொன்றவள
வற்றபாதகனைமானுமே. (சா)

கள்ளையுண்டுமுன்புள்ளபோதமு
மிழந்திடுங்கழுதைகையின்முன்
புள்ளதுங்கெடவவாவினுலிரத
வாதமூதுமவனொக்குமே. (எ)

அருந்தலும்புணர்வுமாதரித்துழலு
மலகைவலையரிடுகண்ணியிற்
பருந்தின்வாயரவின்மண்டுகெங்கொள்சிறு
பறவைநுகர்நறவையொக்குமே. (அ)

பந்தமுத்திபெறவொருவரின்றிவரு
பவமறுக்கமுயல்வுற்றபேய்

வந்தைபெற்றமகனுற்றநோய்விட
மருந்துசெய்பவளாமானுமே. (௯)

ஒன்றுபல்பொருளநித்தநித்தமு
முள்ளதில்லதருவருவமா
மென்றுசொல்லலகைதெளிவுவல்லிருளி
னிருளையிட்டதிஃதொக்குமே. (௧0)

வேறு

போதமாயகண்டமான பொருளதொன்றையெண்ணில்பல்
பேதமாக்குமலகையெண்ணிற் பிரமகாதர்போலுமே. (௧௧)

தன்னொழிந்துவேறெனச் சகத்தைநாடவுற்றபேய்
பொன்னொழிந்தபூண்விரும்பு போதகினர்போலுமே. (௧௨)

எதிர்நிகழ்ந்ததுண்டலாத தில்லையென்றியம்புபேய்
கதிரையில்லையென்றியம்பு கண்ணிலாளனொக்குமே. (௧௩)

இடும்பையோடுசுற்றமுற்ற வின்னதீர்க்கநின்றபேய்
குடும்பிகோபுரஞ்சுமந்த கூனுபாவைமானுமே. (௧௪)

வேறு

இக்களேபரநிற்கவியற்றுபேய்
மொக்குள்பூண்கட்டுமூர்க்கனையொக்குமே. (௧௫)

வேறு

அகலிடத்துளதீங்கெலாமவற்றினுக்கணுவாம்
புகல்வதென்கொல்பேய்க்கழகுபொல்லாமையேயன்றே. ()

பேதமன்னுபூதங்களின்பெருமையார்சொல்லும்
பூதமைந்தையும்பெற்றதுமவற்றினோர்பூதம். (௧௭)

ஓதவெல்லையுண்டாதலினுய்ந்திலவலகை
போதமெல்லையிலாமையின்மெலிந்தனபூதம். (௧௮)

உவமை முற்றிற்று.

ஆ பாட்டு - ௧௯௧.

விச்சை.

எக்கணங்களுமெத்துதியுங்கொடு
தொக்கணங்கினைச்சூழ்ந்தடிபோற்றவே. (௧)

உம்பராதிபராமும்பர்கைதொழ
வெம்பிராட்டியிருந்தருளெல்லையில். (௨)

விச்சையாவையுங்கற்றவிச்சாதர
னிச்சையாம்பரவிச்சையைநெஞ்சிலே. (௩)

ஆயகாலமிதுவெனவங்கொரு
பேயைவாவென்றுபேய்த்தனம்போக்கவே. (௪)

வேறு

ஆணுடன்பெணலியாயுடம்புக
ளநந்தமாயதனிலொன்றினெண்
சாணுடம்பினளவாவிருந்தநின்
றன்மைபாரதனினன்மைபார். (௫)

மடக்குமாறுமிகும்வானவர்க்குமரி
தாயறக்கடியவாயுவிற்
கடக்குமாமனனடங்கல்பாரது
வடங்கிநின்றதொருகருமைபார். (௬)

புக்கபூமிதெரியாதவாறுமுன
னின்கணின்றயுளாயொன்றிலா
மிக்கபேரிருளொளிக்கஞானநல்
விளக்குவந்துகண்விழித்தல்பார். (௭)

விழித்தியாவையும்விழித்திமைத்துல
கமைத்தளித்தகிலமீளவு
மழித்துமூவர்களுமாகிநின்றவது
வாதல்பாரதுவலாமைபார். (௮)

இட்டதீபமுமிலங்குமெய்பொருளு
மெண்ணும்யாவைகளுமின்றியே
விட்டதீயெனவிளங்குமாறுமற
விட்டிருந்தவொருவிரகுபார். (௯)

களித்தயாவையுமிறந்ததென்றலு
மிறந்தேதார்கரியகங்குல்போ
யொளிக்கயாவையுமுணர்ந்துநின்றபர
மானவொண்கதிருதித்தல்பார். (௧0)

எண்ணவாருமிசையாதவண்டசத
கோடியுந்தரமுனேதுவாம்
விண்ணையாதிவருபூதமைந்தினையும்
விழியினுனதுவிழுங்கல்பார். (௧௧)

காட்சியாவுமொருகண்ணதானபடி
பார்கவின்பெறவிருந்ததோர்
மாட்சிபார்வசனமானகோசர
மலர்க்கையுற்றமணியாதல்பார். (௧௨)

மறப்புமின்றியொர்நினைப்புமின்றிமலர்
வதுவுமின்றிமலர்வற்றதோ
சிறப்புமின்றிநிகழின்றியிப்பொரு
ளிருத்தல்பாரெனவியம்பியே. (௧௩)

அலகையாயுழலுமென்னையேயுள
வனந்தவின்பவறிவாக்கினு
யுலகையார்தமினொருத்தனுமென
வுனைக்கருத்தினினினைப்பதே. (௧௪)

முன்னையானெனதுகண்டிலேன்மொழி
யிறந்தவின்பவறிவாயினே

னென்னையானினிவியம்புமாறென
விறைஞ்சிநின்றவளையேத்தியே. (௧௫)

இந்தவிச்சையுலகத்திலியாருள
ரெனக்குநின்றிருவுளத்தினல்
வந்தவிச்சையெனவவனுநாயகி
மலர்ப்பதங்களில்வணங்கவே. (௧௬)

அன்னையாதரவினோடவன்றலையி
னம்புயப்பதமளித்துவந்
தென்னையாளிபரவிச்சைவல்லவனை
யாவரும்பணிமினென்னவே. (௧௭)

விச்சைமுற்றிற்று.
ஆ பாட்டு - ௨0௮.

---

## பேயிரங்கல்.

விச்சைகண்டவர்கடொழுகைகண்டில
மிகப்பசித்துவிழிசுழலுவேம்
பிச்சைகொண்டுணவுமிடுகிலார்களிவை
பேய்களென்றிகழ்வுபேசியே. (௧)

அண்ணலாரடியர்கொண்டநல்லவற
வேடமாகுமவைகொண்டியா
முண்ணலாமெனநினைந்துகொண்டன
மறிந்துகொண்டதிவ்வுலகமே. (௨)

எந்நிலங்களும்வளைந்தவேழ்கடலு
மெப்பொருப்புமுளயாவையுந்
தின்னினும்பருகினுங்கெடாதுபசி
யென்னருந்தியிதுதீருமே. (௩)

வேறு

தாகமோகாதியெலாந் தணிக்குமொருதனிமருந்திங்
கேகமாமுணர்வென்ப ரெங்கள்கணிற்காண்கிலமே. (௪)

அந்தவொருமருந்தினைப்பெற் றநந்தமாயிரத்தொருவ
ருய்ந்தவருண்டில்லையென்ன வோதுவதும்வேதமே. (௫)

மகனுரைப்பெற்றமறைவல்லவரும்பெற்றிலார்
சுகனூர்பெற்றனரொன்று சொல்லுவதும்வேதமே. (௬)

அப்படியேயரியபொருள் பெறுமவராரலகைகளா
யிப்படியேயிப்படியிற் றிரிகின்றயாங்களியார். (௭)

கற்றெல்லையறப்பிதற்றிக் கண்குழிந்துகடைகடொறுஞ்
சற்றல்லயாம்பசித்துத் தடுமாறுந்தடுமாற்றம். (௮)

மழித்துநீட்டியும்பறித்தும் வற்கலைகள்பலபுனைந்து
மொழித்துங்கோட்டிகள்கொண்ட தெத்தனையாமுண்ணவே.

கருக்கெடுப்போமுங்களைநாங் கழல்சூட்டியென்றுபொய்க்
குருக்கொடுப்போமெனிற்கண்டு குதித்தோடிப்போவர்களே.

பேசிலோவல்லவாய்ப் பேயென்பர்பேசுதற்குக்
கூசிலோவூமனெனக் கொச்சையெனக்கூறுவரோ. (௧௧)

துதிப்பாரைத்துதிப்பதுவுந் துதித்தாலுந்தம்மையவ
மதிப்பாரைமதிப்பதுவும் வயிறெருசாண்வளர்த்தற்கே. ( )

மிகையாகும்பகையிதனில் வேறுண்டோவுற்றவரும்
பகையாகப்பண்ணுவதும் பாழ்வயிறேயல்லவோ. (௧௩)

இந்தவயிறேபெரிய தேழ்கடலோபெரியதுதான்
வெந்தவயிற்றுள்ளெரியோ வேலையினில்வடவெரியோ. ( )

வந்தனைசெய்துனைவாழ்த்த வைத்தருளாய்வயிற்றினெரிக்
கிந்தனந்தேடிச்சுழலப் பண்ணினைநீயெங்களையே. (௧௫)

உடலெழுசாணுய்ப்பண்ணி யொருசாணுமொழிப்பதற்குக்
கடலுலகினுலகமெலாங் காண்பாளைக்காண்கிலமே. (கசு)

பிழைத்தக்காற்பொறுத்தருள்கைபெரியோய்நின்கடனன்றே
யுழைத்தக்காலடியோங்க ளுனக்குறுதியுரைத்தருளே. (கஎ)

பேயிரங்கல் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

## கனவு.

எனவிளைப்பெலாம்விளம்பி யிரவுகண்டதொருகனு
நனவெனத்திகழ்ந்ததென்ன வொன்றுநின்றுநவிலுமே. (க)

இமைத்ததோகணில்லையோ ரெல்லையிற்றவல்லையிட்
டமைத்தவோர்மகாந்தகார நின்றியானமுங்கவே. (உ)

விட்டிலங்குதீபமேற் றிசைக்கணேவிளங்கவோர்
மட்டலங்கன்மார்பினு னொருத்தன்வந்திருக்கவே. (ந)

எல்லையற்றவன்பதம் பணிந்தியானிறைஞ்சவே
தொல்லையற்றவன்பரென்னை யாளவென்றுசொல்லவே. (ச)

புலன்களிப்பவந்தசெய்ய பொற்பதங்களின்றியே
நலன்களிப்பதென்னையென்று நான்மிகக்களிக்கவே. (ரு)

தேனுமிக்கபாலுமென்ன நின்றுதித்தியாவென்முன்
மோனமுத்திரைதன்னிலே யிருக்கவந்தமூர்த்தியே. (சு)

மெய்யெனுநலத்தொடே விழித்ததென்கணிப்பய
னையைநாடியருளுகென்ன வறியவோதுமன்னையே. (எ)

அந்தகாரமோகனின்னை யாளவந்திருந்தவ
னெந்தைகாரணன்ப்ரகாச ஞானதீபமிட்டதே. (அ)

மோனமாயிருந்ததன்மை மொழிபிறந்தவின்பமெய்ஞ்
ஞானமாயிருந்தவே றிலாததன்மைநாடவே. (௯)

மேற்றிசைக்கண்வானவர்க்கு மேலனுதலாலுடன்
போற்றிசைக்குமன்பர்பாத முற்றபுண்ணியத்தரே. (௧௦)

கருத்தினுடொணுதவெந்தை கண்ணினுடமண்ணின்மே
லொருத்தனுகிவந்தளிக்கு மென்றுவேதமோதுமே. (௧௧)

வேறு

மரணமும்பிறப்புமறுமாமணி
கரணமெல்லாங்கடந்தகடவுளே. (௧௨)

வினவிவந்துநீவேண்டியதேதருங்
கனவுமுந்துருக்காரியமில்லையே. (௧௩)

என்னவென்னையிறைவிமறையெலாஞ்
சொன்னவன்பிறவானென்றுசொல்லுமே. (௧௪)

விண்முதற்பொருளெல்லாம் விளைப்பவன்
கண்முதற்புலன்காண்டற்கரியனே. (௧௫)

முந்தைமூவர்க்குமூலமுனிவர்தஞ்
சிந்தையானுந்தெரிதற்கரியனே. (௧௬)

வரவுபோக்கற்றவான்பொருளென்றுமுன்
பரவுமாமறையெல்லாம்பகருமே. (௧௭)

முடிவுமாதியுமற்றமுழுமுதல்
வடிவமாகிவரும்படியெங்ஙனே. (௧௮)

சொல்லுகோலஞ்சுருதிவிருத்தமோ
வல்லவோவெனவன்னையருளுமே. (௧௯)

அருவனுகிலுமன்பர்க்குருவமாய்
வருவனென்றதுமாமறைகாணுமே. (௨௦)

பத்தியாம்வலையிற்படும்பார்மிசைப்
புத்தியாலறியொண்ணுப்புராணனே. (உக)

தேவியிப்படிகூறத்திருவருள்
பாவியேற்கிலதென்றுபதைக்கவே. (உஉ)

கனவு முற்றிற்று.

ஆ பாட்டு-உசஎ.

---

சசிவன்னபோதம்.

அலகையச்சமறவகவான்களு
முலகின்முத்திபெறும்பரிசோதுவாம். (க)

புணர்ந்தபாவமெலாம்பரிபூரண
முணர்ந்தஞானிவிழிபடவோடுமே. (உ)

வேறு

எழிலாருஞானிபுகழென்னைகூற
லுயர்வீடிவன்செல்வழிசெய்
தொழிலாளர்செய்கையதுகேளுமுன்னை
யிதிகாசமொன்றுசொலவே. (ங)

தந்தாபமற்றபரனேவல்செய்த
வவனுற்றபேறுதனைமுன்
செந்தாமரைக்கண்முதல்வர்க்கெம்மண்ண
திருவாய்மலர்ந்ததிதுவே. (ச)

உவமிப்பின்ஞானிவிழிபட்டுமுன்னை
வினைவிட்டுமுத்தியுலகிற்
றவமற்றுவெய்யவினையேபுரிந்த
சசிவன்னனெய்துகதையே (ரு)

வேறு

ஏமம்புகல்வாருளர்பாதகரா
  மியாவர்க்குளுமிக்கவனுகுமிவ
னமம்புகல்வார்குலமும்மெரிவாய்
  நரகம்புகுமாறுநடந்தனனே. (௬)

மலமேவியதீவினையின்வலியால்
  மகிழும்பர்பதத்திலிருந்தவிவன்
குலமேவியதென்புலவாணர்களுங்
  கொடிதாநரகங்குடியேறினரோ. (௭)

மிகமேவியபுண்ணியபாவமெனும்
  வினையின்பயன்மேலொருகாலமுரு
திகமேவருமென்பதனுலுளரோ
  யெல்லாமிவனைச்செறவெய்தினவே. (௮)

தன்புத்திரனேயம்விடாமையினுற்
  றவறுற்றவிவற்பெறுதந்தையுளந்
துன்புற்றினியென்னைகொலோபுதல்வன்
  றுயர்தீர்வகையென்றுசுழன்றனனே. (௯)

ஒன்ருலும்வினைத்துயர்துய்ப்பதலா
  லொழிவிக்குமுபாயமுனக்கிலதே
யென்ருலுமறிந்தவனன்புவிடா
  னிவனைக்கொடுழன்றனனெங்கணுமே. (௧௦)

ஒருமாதவன்மற்றிவன்வேதனைகண்
  டொழிவற்றுளவொன்றையுளத்துணரும்
பரமாகியஞானிகள்கண்ணுறலே
  பரமௌடதமென்றுபகர்ந்தனனே. (௧௧)

தானந்தமிலாததனைத்தருவான்
சத்தீச்சுரமென்னுமிடந்தனில்வாழ்
மானந்திபராயணனென்பவனின்
மைந்தற்குறுநோய்க்குமருந்தெனவே. (௧௨)

முடியாவுபதேசமிதென்றவனு
முனிவன்பதமெய்திமொழிந்தனனிக்
கொடியான்வெருவாதுகுயிற்றியநோய்
கூறற்கரிதாயகொடுந்தொழிலே. (௧௩)

ஈங்குன்றிருமுன்பகரும்படியோ
விவனெய்தியதீவினையென்னவெலா
நீங்கும்படிதன்னனுபூதியினு
னிகழும்விழிவைத்தனனின்மலனே. (௧௪)

கணியாதபவக்கடுவானதிருக்
கண்வைத்தலும்விட்டனகாதுகடும்
பிணியாவையுநல்லபிதாவிறைதாள்
பேணிப்பணியென்றுபெயர்ந்தனனே. (௧௫)

இடனேமுதலாகவுவந்திறையோ
னேவும்பணிசெய்திவனுஞ்சிலநா
ளுடனேயிவனேதிருமேனிதனக்
குரியானெனவுற்றனனும்பனொடே. (௧௬)

நன்றுமுனிதாள்வழிபாடதனு
னுறுவிதமானபிறப்பினைவிட்
டொன்றுகியவீடுணருத்தமர்கட்
குளசாதனநாலுமுதித்தனவே. (௧௭)

முனிவன்றிருமுன்புளதன்குறைதான்
மொழிவன்சிலவஞ்சலிகுஞ்சியதாய்ப்

பணிவந்திருகண்கள்பதங்களிலே
பலகால்வலம்வந்துபணிந்திடவே. (௧௮)

அருளேவடிவாகியமாமுனிதா
னறியாதவர்போலவழுங்கலுறும்
பொருளேதெனமைந்தனடுங்கினனிப்
பொல்லாதபவப்புணரிக்கெனவே. (௧௯)

வெருவும்பிறவிக்கடல்வித்தரமுன்
வேதாகமகீதைவிளம்புவதைக்
குருவுந்தனதன்பன்மனத்தளவிற்
கொளுமாறுதொகுத்திதுகூறிடுமே. (௨௦)

வேறு

மரணபவங்களானபுனலையுடையது
மதியைவிழுங்குகாமவரவுபெரியது
கரணவொழுங்கருதுவிடையவிரைநுகர்
கணமொடியங்குமீனமிகவுமுகள்வது. (௨௧)

பெருமிதமென்றுகூறுபெருமையுடையது
பிணிகளெனுங்கெடாதுபுலவுகமழ்வது
வருமிடரின்பமானதிரைகள்பொருவது
மனமெனுமந்தராசமகரமுறைவது. (௨௨)

அளவிலகந்தையாமையபரிமிதமுள
வவாவெனிறைந்தவாழமறியவரியது
களவுநெருங்குபாறுமலையுமுடையது
கலகவிடங்கமேவுகிருமிநெளிவது. (௨௩)

துகளெனுநன்கலாதநுரைகடருவது
துறவியினின்பமானகரையைவிடவகன்
மகளிரெனுந்தவாத வலியசுழியது
மறலியுமஞ்சுகோபவடவையெரிவது. (௨௪)

வெருவருகின்றபோகமுதலையடுவது
விவிதமனந்தமானதுறையுமறிபவ
ரொருவர்கடந்துபோகவிரகிலெழுபவ
வுததிவிளம்பயாவருலகினறிவரோ. (௨௫)

பொறிவழிசென்றுமீளுமவலமதிகொடு
பொருசமயங்களாறுமுறியவிழுமதி
லறிவழிவொன்றிலாதபொருளதெனவுண
வனுபவவங்கமேறுமறிஞரகல்வரோ. (௨௬)

புணரிகடந்துபோகவிரகிலெனமொழி
பொழுதுபுலம்பியாவிபுதல்வனிறுமுன
முணர்வெனும்வங்கமேறுமறிஞரகல்வரொன்
றுரையைவழங்கிநாதனுவகையருளவே. (௨௭)

வேறு

வாழியெனவிறைவனடிதொழுதுவருபவமா
மாழியினையகலுமறிவருளுகெனவவரோ. (௨௮)

பரவறிவுமபரவறிவெனவுமிருபரிசாந்
திரவறிவையறியுமவர்மொழிவர்தெளிவுறவே. (௨௯)

அபரவுணர்வருமறைகண்முதலகிலகலையு
முபரமதையறவுதவுமுணர்வுபரவுணர்வே. (௩0)

ஆகமவிதங்களறிவார்கள்பரமறியார்
யோகமொடுறங்குமவரோபரமுணர்ந்தோர். (௩௧)

புராணமிதிகாசமெவையும்பொருளனைத்தின்
பிராணனறியாதுளவிடத்ததுபிதற்றே. (௩௨)

இயலறிவதிசையறிவதினமறியவுளதா
மயலறிவதறிவதலவறிவறிவதறிவெ. (௩௩)

நவிலுகலையறுபத்துநாலுமுணர்வாரும்
பவலயமதறுசுத்தபரமமறியாரோ. (௩௪)

ஆகவறிவாளரறிவாரவையனைத்து
மேகவறிவாளரிவையாவுமறியாரோ. (௩௫)

ஐயறிவறிந்தவையடங்கினவரோனு
மெய்யறிவிலாதவர்கள்வீடதுபெறுரோ. (௩௬)

மெய்ம்மையறிவல்லதமில்வேறறிவதெல்லாந்
தம்மையறியும்மறிவதேயறிவுதானே. (௩௭)

பூசனையுமதுசகலபொருளுமறிதமையு
மீசனையும்வேறதறவறிவதறிவெனவே. (௩௮)

தானெனுமுடம்பதுதனைத்தவிரவேறு
யானெனுமருத்தமுளதோவருளுகெனவே. (௩௯)

வேறு

எனதாடைபொன்பூமகன்றையல்பாய்மா
விபங்கண்முகங்கால்கைமெய்யென்னவென்றுந்
தனதாயுரைப்பான்வகுத்திந்தவூனைத்
தானென்றயர்த்துஞ்சொலத்தக்கதன்றே. (௪0)

தாளாகவூராழிதனுவென்னவிணு
தண்டாவகன்மார்புதட்டாகமொட்டா
நாளான்மலர்ச்சென்னிகூந்தற்கொடித்தேர்
நாணுளுமூர்வானில்வேறுகநாடே. (௪௧)

கடக்குஞ்சரம்பண்ணியுண்ணின்றொருத்தன்
கைபாதகன்னங்கள்மெய்போலியக்குங்
கிடக்குநடத்தாவிடத்திவ்வுடம்பும்
கிடக்கும்மொருத்தனடத்தாவிடத்தே. (௪௨)

ஒருகூறுமலனாகுமொருகூறுடம்பா
மொருகூறுமனமாகுமுண்டற்றவன்ன
மிருகூறுநீயாகிநொருகூறுநீயா
யிழிக்கும்மலஞ்சோறிடப்பட்டதுடலே. (சங)

கிளராதரத்துண்ணுமன்னஞ்சுடக்கை
கிட்டப்பொருதேயிருந்தார்கிடந்தார்
தளராதுறப்பொன்றுமுயிர்போகவன்றே
தழற்பள்ளிமீதேதுயின்மூர்சகித்தே. (சச)

நிழற்பாவைகண்ணாடியிற்பாவைகைகா
ணிமிர்க்குமுடக்குமிவன்செய்யுமெல்லாத்
தொழிற்பாலவாமற்றிவ்வுடலஞ்செய்தொழிலுஞ்
சுடர்ஞானவடிவானவன்செய்ததொழிலே. (சரு)

அறிகின்றபொருளென்றுமறிவானில்வேறே
யானுலிவ்வூனுரையானென்னலாமோ
செறிகின்றபுள்ளல்லவேகூடிவ்வகையே
செடமானவுடனின்னில்வேறென்றுதெளியே. (சசா)

நிலனாகும்வற்பென்றனெகிழ்கின்றநீரா
நெருப்பாமிதிற்சுட்டதெல்லாமுமனிலஞ்
சலமானபுரையானவானிந்தவுடலஞ்
சடமானவைம்பூதவுருவங்கடாமே. (சஎ)

விழியைப்புமானென்னில்ரவியாதியாலே
யுருவத்தையல்லால்விளக்காமையாலே
மொழியப்படுங்கன்னமுதனாலுமவனன்
றுருக்கண்டக்ண்டன்னையொப்பாகவுன்னே. (சஅ)

வேறு.

அழலுண்பொருள்களினுண்பவைமுக்கூறதின்முற்கூ
றணியென்புகடுக்கூறதுமச்சைக்கிடனாகு

மெழில்கொண்டகடைக்கூறு துவக்காயெழுமன்றே
யெழிஞன்மறையந்தங்களிசைக்கின்றனதானே. (சகூ)

உண்ணும்புனன்முக்கூறதின்முற்கூறுவர்நீரா
முதிரந்நடுவிற்கூறுகடைக்கூறுபிராண
னெண்ணுமிதிலிருகூறதுநீயாயிடினன்றே
யிறுகின்றபிராணன்னதுநீயாகுவதிசையே. (ருo)

வேறு

பிராணனுமல்லதுஞ்சினுணர்வின்மையா
லஃதுணரும்புலன்களொழிவாற்
பிராணனிதென்னின்மன்னையொழியாத
சேனைநகர்சூழ்வலஞ்செய்பொழுதே. (ருக)

கரணமொடுங்கவாயுநிகழ்வென்கொலென்னி
னுடல்காவலாகுமலதேன்
மரணமடைந்ததென்றுதமர்சுட்டிடாமுன்
வனைவாலின்ஞாளிகொளுமே. (ருஉ)

இனமுறவெண்ணவுள்ளகரணத்திலொன்றீ
தெனலாவிதென்னதெனலான்
மனமுநீயல்லவென்றவதனுலுமுந்து
மதியல்லவந்தவகையே. (ருங)

வேறு

இடரின்புளதாய்நிலையற்றறிவற்
றெண்ணுங்கரணங்களிலாயெவரு
மடரும்பிறவிக்கடியென்றுணரு
மாங்காரமுநீயலவென்றறியே. (ருச)

ஐயப்படலோர்பொருணிச்சயமா
யறியப்படல்யானெனதென்றுமதஞ்

செய்யப்படல்செய்வதுசிந்தனையாஞ்
சித்தம்மதவன்றெனநீதெளியே. (ருரு)

முன்னாகவுடம்பதுசித்தமதே
முடிவாகமொழிந்தபொருட்டிரடா
நின்னாகிலநீயறியும்பொருளாய்
நிகழ்கின்றதனாலெனநின்மலனே (ருசு)

உன்னாலறியப்படும்யாவையுமுன்
னுருவன்றெனவோதினையொக்குமெனக்
கென்னாலறியாதொழியும்பொருளோ
யானாதுவதென்றனனென்றலுமே. (ருஎ)

அறியாப்பொருள்காரணமாயைகுறித்
தறியும்பொருள்காரியமாமுலக
நெறியாற்றிகழ்நான்மறையந்தமெலா
நீயன்றெனவோதுநிரந்தரமே (ருஅ)

அறியும்பொருளன்றறியாப்பொருளன்
றறிவாகியநீயெனுமப்பொருடான்
பொறியின்வழிநின்றறியும்பொருளோ
போதக்கண்விழித்தறியும்பொருளே. (ருகு)

வேதப்பொருடானதுவேறுசொலும்
வினையாவையுமன்றொருவேறுமிலாப்
போதப்பொருளந்தமறைக்கணியாம்
புனிதப்பொருடத்வமசிப்பொருளே. (சுo)

வேறு.

நிமலமாம்பரமதுவெனும்பொரு ணீயெனும்பொருள்சீவனே
யமலமானவிரண்டினயிக்கிய மசிபதப்பொருளாவதே. (சுக)

அருமையாகியபிரமமுன்னிலை யாகுமாருயிர்பின்னிலை
யிருமையானவிரண்டினயிக்கியமெய்தமாறெவனென்னவே

உபாதியால்வருபேதமேயிவர்பேதமொன்றுமுயிர்க்குறுங்
கபாதியாமுடல்போலிறைக்குளகாரணாதிகள்காயமே. (சுங)

ஈசன்முற்றறிவான்வியாபியெவைக்குமேதுவியம்புமா
காசகன்னிருபாதிப்பாவனை காரணாதிகளாவதே. (சுச)

நீதியானிருபாதிநீக்கிடநீயெனச்சொல்பதத்தினு
மாதியாகியதற்பதத்துமசுத்தசுத்தமுணாத்துமே. (சுரு)

ஆகமுன்றிகழேழுநானெனவெரும்பதத்தினசுத்தமே
சோகமின்றியசான்றுநானெனவெரும்பதப்பொருள்சுத்தமே.

அகிலகாரணமாதிநானெனறற்பதத்திலசுத்தமே
சகலகாரணசான்றுநானெனறற்பதப்பொருள்சுத்தமே. ()

செறிந்தகாரணகாரியங்கள்சிதைத்துமேலுறுசித்ததா
யறிந்தவாதனைதானுமற்றதவ்வசிபதப்பொருளாவதே. (சுஅ)

அசுத்தமாகியவிருபதத்தினுமுக்கியப்பொருளாகுமே
விசுத்தமானவிலக்கியப்பொருளென்றுசொல்லுவர்விமலரே.

மூரண்டசீவபரங்கடம்முடன்முக்கியப்பொருளாவதே
யிரண்டின்வேறறுசிற்சொரூபமிலககியப்பொருளாவதே. ()

உளக்கியப்பரசீவர்தங்களுடம்பிரண்டுமிலக்கண
வாக்கியப்படிநீக்கினுலொருவத்துவேபரவத்துவே. (எக)

ஓரில்விட்டதும்விட்டிடாததுமுபயமும்மெனவுணர்வுளோர்
தேரிலக்கணைதிரிவிதத்தினிசைப்பர்மற்றதியம்புவாம். (எஉ)

மஞ்சுகூப்பிடுமென்றல்போலவும்வடபகீரதியுள்ளதே
விஞ்சுகோஷமதென்றல்போலவும்விட்டலக்கணையாவதே. ()

செவலைநின்றதுவெள்ளைபோயின
  தென்றுசெப்புதல்போலவே
கவலையின்றிவிடாதலக்கணையென்றுநீகொள்கருத்திலே. ()

மேவும்விட்டுவிடாதலக்கணைமெய்ம்மையாதெனிலந்தவித்
தேவதத்தனெனும்பொருட்படிசிந்தைசெய்திடுதிரவே. (எரு)

விட்டலக்கணைதனையும்விட்டுவிடாதலக்கணைதனையுநீ
விட்டுவிட்டுவிடாதலக்கணையால்விளங்குவிளங்கவே. (எசா)

போதுமேவியதேசம்விட்டொருபுருடனைக்கொளுமாறுபோ
லோதுமீருடல்கண்டுவிட்டதினுண்மைகாணவுரைத்திடே. ()

வேறு

பிரியாவுயிர்காரியமாமுடலும்
  பிரமத்துறுகாரணமாமுடலுங்
கரியாகியவாதனையுங்கழியக்
  காட்டும்படிகண்டுகொள்கண்ணுறவே. (எஅ)

கரணத்திரணிற்பினுமப்பொருளைக்
  காணக்கிடையாதவைகையறவே
மரணப்படினும்மதுகண்டுகொளும்
  வழியில்லையெனும்படிநீமதியே. (எகூ)

எந்தக்கரணங்களுமேவனனு
  விதில்வாதனையால்விடையங்களொடே
யந்தக்கரணங்கள்பொருந்தல்கனு
  வவைமாய்தல்சுழுத்தியவத்தையதே. (அ0)

வேறு

வினவிற்பரத்தையறிவுறுதற்கவத்தைபுலன்வினைமாறியே
நனவிற்சுழுத்திநிலைவரினப்பொருட்டிகழுநலனுகவே. (அக)

துவிதத்தவத்தைகளையறிவுற்றவத்துரியநிலைசிவனே
யிவிதத்தினப்புருடனனவுற்றவத்துரியநிலையீசனே. (அஉ)

அகிலக்கரிப்பரமதுரியப்பொருட்டுரியமதுவாகையே
புகலுற்றதத்வமசியெனுமுப்பதத்தின்முடிபொருளாவதே. ()

நிமலப்பொருட்சுருதிநெறியிற்பெறக் கருணைநிதிகூறவே
யமலப்பொருட்பெறுதலருமைத் தெனக்சழறியடிவீழவே.

தமரக்கலைக்களவுதெரிவற்ற தற்பொருளதனையீகுவா
னமரர்க்களப்பரியபதநற் புனற்கொடுசெய்தபிடேகமே. ()

பவனத்தில்வைத்தவமிர்தினின்மிச்சி லிட்டினியபரிவோடுமா
தவளப்பொடிக்கவசமெனவிட் டடற்பகைகடலைசாயவே. ()

உதகத்துடற்பொருளோடுயிர்கைக்கொ டுச்சிமிசை
யொருபோதொடே
பதகைத்தலத்தைவிடவிருகைத் தலத்தொ
டிருபதமேவியே. (அஎ)

ஒழியப்புலக்கணுபநிடதப்பொருட்டெளிய
வுளஞானமாம்
விழியைக்கொடுத்துமொழியெனமுப்பதப்
பொருளும்வெளியாகவே. (அஅ)

நனவைத்துவக்கிமுடிதுரியத்தைமுற்ற
வினைநவினீதியே
மனவர்க்கமற்றவனுபவமுற்றசிற்கனவின்
வலியோதுமே. (அகூ)

வேறு

புரணமாகவெப்புறம்புளபுலன்களுமந்தக்
கரணம்யாவையும்வழங்கிடநனவெனக்கண்டேன். (கூ0)

புரணமாகியபுறம்புளபுலன்கெடவந்தக்
கரணம்யாவையும்வழங்கிடங்கனவெனக்கண்டேன். (கூக)

மரணமாகியதிசையிதுவெனும்படி மறுதிக்
கரணம்யாவையுமிறந்துளசுழுத்தியுங்கண்டேன். (கஉ)

எஞ்சலின்றியெக்கரணமுமிறந்திருண்டிருந்த
துஞ்சலங்குணர்போதமாந்துரியமுங்கண்டேன். (கங)

துரியமாகியபோதமோர்துளக்கமற்றனைத்தின்
கரியதாயிருந்திடம்பரமனவெனக்கண்டேன். (கச)

புணர்ந்தவிச்சகத்தொழித்துணர்போதமாந்தனையே
யுணர்ந்தமற்றதுபரகனவெனும்படியுணர்ந்தேன். (கரு)

சான்றுசாக்கியமிறந்திடத்தானிருந்தமையுந்
தோன்றிடாவிடம்பரசுழுத்தியதெனத்துணிந்தேன். (கசு)

மரித்ததென்றுணர்ந்துரைத்ததுமரித்திடந்தனிலே
தெரித்தபோதமேததுபரதுரியமாய்த்தெளிந்தேன். (கஎ)

இறையெனும்பொருட்டுரியமேயென்னையாண்டவனே
மறையினந்தநற்பதப்பொருணனவெனமதித்தேன். (கஅ)

பண்டைவிச்சுவவாதனைப்பழுதுபோய்முழுதுங்
கண்டகண்ணதேயாகியகனவதுங்கண்டேன். (கக)

காட்சியாவையுங்கண்ணதாயக்கணுங்கரைந்து
மாட்சியாகியவகோசரமுறக்கமாய்மதித்தேன். (க௦௦)

அருந்தவாமறையந்தமாமகோசரந்தனினி
யிருந்தவாறறிவித்தவாறெங்ஙனேயிசைப்பேன். (க௦க)

எம்பிரானிடந்தொறுமிடந்தொறுமதுவதுவாய்த்
தம்பிரானடஞ்செயும்வகைசாற்றுமாறறியேன். (க௦உ)

ஆவியேயடியேன்செய்கைம்மாறுனக்கென்னிற்
பாவியேனதுதானுநின்னுடையதாம்பண்டே. (க௦ங)

ஆவல்செய்தெனதாக்கையுள்ளளவுநின்னடியா
ரேவல்செய்வதேயன்றிமற்றொன்றுநானறியேன். (கoச)

இறவிலெப்பதமும்பெறவேண்டிலனென்றும்
பிறவிவேண்டுவனின்றிருப்பணிசெயப்பெறினே. (கoரு)

வேறு.

என்றுபலகால்விழுமெழுந்தொழு
மழும்புரிவதென்னையினியா
னின்றுபலவாகவுரைசெய்யுமவ
னன்பினொடுநெஞ்சுருகியே. (கoசு)

ஏட்டினறிவின்றியிறைதன்னிலறிவின்றியிவ்வுடம்பினுடனே
வீட்டிலுறைவானையினிவீடுபெறுமென்பதுவிளம்புகிலனே.

வஞ்சவலியானரகில்வீழ்பிதிர ராழ்நரகுபாழ்படமகா
விஞ்சைவலியாலடையவேறினர் சுராதிபர்கண்மேலுலகமே.

தேவருமனித்தருமிவன்றொழில் வியந்துரைசெயப்படுவதோ
மூவரும்வணங்கிமுடியாலவன தேவல்செயமுந்துவர்களே.()

ஞானியையநரன்சுரனெனுந்தொழிக
ஞாலமுயநாதனருளான்
மேனியதுகொண்டுதனைநல்கவரு
மென்றறையும்வேதமுடிவே. (கக0)

சசிவன்னபோதமுற்றிற்று.

ஆ பாட்டு - ௱௰.

திருச்சிற்றம்பலம்.

---

## திருமுடியடைவு.

மூலமானமறைப்படிமூலமே
கோலமானபரிசுகள்கூறுவாம். (க)

வேறு

தன்னுகநல்கவருளேநிறைந்த திருமேனிகொண்டுதனதாள்
முன்னுனதேவரொருமூவர் சூடவிறையாயிருந்தமுதலோன்.

மாதுற்றபாகனெனவந்துவெள்ளி மலைமேலிருந்துமறைநா
லோதுற்றஞானவடிவைத்திகழ்த்தி யுலகைப்புரந்தவுரவோ

ஆலத்தினீழலறநல்கிஞான [ன்.
வநுபூதியாகவழியா
மூலத்தைநாலுமுனிவர்க்குமோன
மொழியால்வழங்குமுனிவோன். (சு)

வெளியாய்விசும்பினிருண்மாறவந்த
வெயிலோன்விளங்குமுனநா
ளொளியாயுனக்குமொளியானெனத்த
ளுளிதான்விளக்குமொளியோன் (ரு)

தேனுளுத்ததன்னதநுபூதிதேவர்
குருவைத்தெளிக்கவொளிசேர்
மோனத்திருந்தபடியேயிருந்து
மொழிவற்றவொன்றைமொழிவோன். (சு)

மகனுர்தமக்குமிகநல்கியெந்தை வருகென்றுதந்தைபணியச்
சுகனுர்திருத்தமுறஞானநல்கி யிடர்தாளுெழித்தசுடரோன்.

போராழியேறியடலாழியேவி யருளாதுபொன்றுபிறவிப்
பேராழியேறவிசையற்குநெஞ்ச மிசையப்பகர்ந்தபெரியோ

தேனுக்கமன்னுமமுதொக்கவேத [ன்.
சிரமேமொழிந்தகுருகைக்
கோனுக்குவந்துபெருகன்புநெஞ்சு
முருகக்கொடுத்தகுரவோன். (கூ)

ஊழிக்கமிழ்ந்தவறன்மேன்மிதந்த வயனிற்சிறந்தமறையோர்
காழிக்கண்வந்துசிறுபாலகன்க ணுறுமாறுநின்றகழலோன்.

இல்லூருவந்தமடவார்தனங்களிடர்நஞ்சுதஞ்சமிறையோ
னல்லூரில்வந்தபதமென்றுநாவினரசன்றுதிக்கவில்லோன்

இளையாதபூணுமணவாளர்போல
விளமாதர்கொங்கையிடையே
விளையாடவீடுமிகுசுந்தரற்கு
விளைவிக்கவல்லவிறலோன். (கஉ)

உரைசெய்யவின்றியுளவொன்றுவந்த
தெனவாதவூரனிருகண்
டிரைசெய்யநீர்கொடுரைசெய்யவன்று
திருவாய்மலர்ந்ததிறலோன். (கங)

சித்தானவேடமதுகொண்டுசெம்மை
மிகுசோதிசித்தவடமா
மத்தானமேவியறிவானதன்னை
யறிவித்திருந்தவறவோன். (கச)

தானந்தமற்றவருண்மேனிநின்ற படிநிற்கவன்றுதனதா
மானந்தமிர்த்தமறிவித்ததில்லை நகர்வந்தளித்தவருளோன். ()

அமராதிபர்க்குமயன்மாலரர்க்கு
நிகரானவாதிமறையோர்
குமராபதிக்கணொருமேனிகொண்ட
வருண்மேனிநல்குகுரவோன். (கரு)

நல்லேனமுன்னர்வருமங்கைதன்னை நகராவுவந்துபிரிது
மல்லேனெனுமலழியாததன்னை
யொழியாமைசொன்னவுரவோன். (களா)

புரந்தாளுகென்றமறைவல்லபூமி
சுரர்சொல்லநல்லபுகழ்சேர்
பரந்தாளுவந்துபரமாம்பதத்தை
யறிவித்திருந்தபழையோன். (கஅ)

தன்செப்புமாறில்பரமன்பதங்க
டலையிற்பதித்துமதுரம்
புன்செய்க்கண்மேவியொழிவற்றதேசு
புகழுற்றதூயபுகழோன். (ககூ)

சீலம்பொருந்துமுனிவோர்கணங்கள்
சயவென்றிறைஞ்சவறவோர்
கோலம்பொருந்திநலமார்திருப்பை
நகர்வந்திருந்தகுரவோன். (உ0)

புயமாதர்கொங்கைபெறவேறில்போத
கனமானபாதமலர்பெற்
றுயர்மாதவத்தருலகுய்யவந்த
விறையாய்வருக்கையுறைவோன். (உக)

பாரார்வருத்தமுறுபந்தபாச
மறவந்துபாதமருடற்
கேரார்வருக்கையிடமாவுவந்த
நடராசனென்னுமிறையோன். (உஉ)

வெருவந்ததொண்டர்கருவெந்துவீழ
நிறையைந்துவேள்விமறையோர்
திருவிந்தளூரிலுருவந்திவைய
மகிழ்வித்தசெய்யதிறலோன். (உங)

ஆவத்தைமாறவுலகன்பர்தன்னி
னருண்மேனிகொண்டுதிருவார்

கோவத்தைமேவியமுதைச்சுரந்த
நிகர்வேறிலாதகுரவோன். (உச)

வேறு.

அரணிதருகனலினொளிர்புரணமொருகரணமற
வயிலவொருமொழியருளவே
தரணிவருசொருபனெனதிடரகலவருகழல்க
டருகருணைபெரியகுரவோன். (உரு)

திருமுடியடைவு முற்றிற்று.
ஆ பாட்டு - ௩அஉ.

---

திருவபிடேகம்.

ஆகியழியாவண்ணமன்பர்க்கெல்லா
மரியதனைக்கொடுத்தருளுமந்தவாதி
யோகிசொரூபானந்தன்மோகற்காய்ந்திட்
டுங்கள்பசிதீர்த்தருளவுள்ளஞ்சென்றே. (க)

குருவடிவாகியவந்தசொரூபன்முனே
மைந்தனெனவேறுமொருகோலங்கொண்டான்
திருவருளாலவன்கொண்டகோலமான
திருவுருவஞ்செய்தசெயல்செப்பலுற்றும். (உ)

வேறு

குருவருளொழிந்தறிவுகூடலரி
தென்பதுகுறிக்கொடுலகந்
திருவருளைநாடும்வகைதன்திரு
வுளத்தினருண்சென்றருளியே. (௩)

தந்தைசொருபன்கழல்பணிந்துபிற
வாதநெறிதான்வினவவே

மைந்தனுளமன்புகொளல்கண்டருளி
யெந்தையுமகிழ்ந்தருளியே. (ச)

செப்பரியவீடருள்செயத்திரு
வுளத்தினருள்சென்றுமிகவே
யொப்பரியவெந்தைபெருமானுவகை
யோடுமதனைத்தருளுமே. (ரு)

வேறு

மாறிலொளியாய்நிகழநந்தவறிவின்பம்
வாய்மைவடிவாகிமனவாசகமிறந்தோர்
வேறில்பொருளாயதனில்வேறுபடுபற்றும்
வீடுமிலதாகுமதுவேதநெறிவீடே. (சு)

கண்ணைமுதலாகியபுலன்களுமியங்குங்
கால்களுமனுதிகரணங்களுமுடம்பும்
விண்ணைமுதலாகவருபூதமுமனைத்தும்
வேறிலறிவாய்நிகழ்தல்வேதநெறிவீடே. (எ)

கூறுபலபேருடையவாறுபலவும்போய்க்
கோத்தபாவைக்கணொருதீர்த்தமெனுமாபோல்
வேறுபலவானசமயங்கண்முடிவிற்போய்
வேறறவடைந்தவதுவேதநெறிவீடே. (அ)

ஆண்டொருலகும்மொருபரிச்சினவுடம்பு
மண்டியசுகங்களுமருந்துதலுமற்றுன்
மீண்டொருவனுந்தவிரவேறுமொருசூழ்கிழ்
மேலறநிறைந்துளதுவேதநெறிவீடே. (கு)

காலையிறைதன்றலையில்வைத்தருளுபோதே
கண்டுகொளலாயுடலிலேயுடலம்விட்டான்

மேலையொருவீடுபுகவென்றுகருதாமே
வீட்டினினிருக்குமதுவேதநெறிவீடே. (௰)

ஈடுபெடுமிப்புறவிதிரவிறையோன்வந்
தெழிற்பதமளித்தினிதியம்புமொழியொன்றால்
வீடுபெறுமப்பொழுதினெப்பொழுதுமுண்டே
வீடெனவிளங்குமதுவேதநெறிவீடே. (௧௧)

களங்கவுடலானபொழுதியாவருமுடம்பாய்க்
காணுமதுபோலொருவன்வீடதுமுளத்தே
விளங்குபொழுதெவ்வுலகினுள்ளபொருள்கட்கும்
வீடுநனிகாணுமதுவேதநெறிவீடே. (௧௨)

வேறு

காதும்வாதியர்கடாசினைந்தபடி கட்டுரைக்குமதுவல்லவீ
டோதும்வேதமுடிவோதலானுபவமுற்றஞானிகளுரைத்தலே.

நாதனந்திபெறநல்கியம்முனிசனர்க்குமாரர்பெறநல்கவே
சூதகன்குறவியாதனோதவவனோதும்வீடடைவுசொல்லிலே.

ஞானநீதியொடுபெற்றமாதவரனேகர்நாளுமளவில்லைசோ
பானநீதியையறிந்தினிப்பகரு மாறுதானரிதுபாரிலே. (௧௫)

வேறு.

உவந்துநாமுனக்கோதியவீட்டிய
லுபநிடத்தொருகோடியுரைக்கலென்
சிவன்றனுலுணர்வுற்றதீதென்னநற்
றேசிகன்றன்றிருவடிபோற்றியே. (௧௬)

இருகரந்தலைக்கொண்டருள்செய்கென
வேத்துமைந்தனார்கண்ணீர்வரவர
வருகவென்றவர்தம்மினுருகியே
மகிழ்வினெந்தைதிருவாய்மலரவே. (௧௭)

மல்குகண்ணினீர்கொண்டிறைமேனியை
மைந்தனுரும்விளக்கினர்வள்ளலார்
புல்லிமைந்தனுர்மேனிவிளக்கினுர்
போதமாகவொருகணப்போதிலே. (கஅ)

உத்தமாபரமானந்தநாடுநீ
யுடையதேயென்றுரைத்தருள்செய்தரை
சுத்தமாநம்பதநினதேயென்று
தூயபண்டைப்படியைவிளக்கியே. (கசு)

உவப்பினுலிவ்வுலகினையாள்வதற்
குரிமையிற்றிருவுள்ளத்தடைத்திறை
சிவப்பிரகாசனெனுந்திருநாமத்துச்
செய்யபாதமணிமுடிசூட்டியே. (உ0)

வேறு.

தன்பினுதியிலாதகோன்முடி யாதிதாண்முடியாருயிர்க்
கன்பினுருள்கருணைநல்லற மணியுமாபரணங்களே. (உக)

கோட்டமொன்றறுமுள்ளமாமலர்
கொண்டுகட்புனல்கொண்டுசெய்
வாட்டமொன்றறுமன்பர்வாசக
மாலையேதிருமாலையே. (உஉ)

ஒன்றுபோதுவமம்பெருவிறை தந்தவாகமவுபநிடத்
தென்றுமோதுசதுட்பதத்திரி யாசனத்திலிருப்பதே. (உஙு)

வேறு

அவனியிற்சிவந்தருசிவற்கதிர்ந்
துவநிடச்சஞ்சலமொலிக்குமே. (உச)

வருபிறப்பறப்பருதியிந்துவந்
திருபுறத்தினுஞ்சுடரொடுப்பரோ. (உரு)

குணங்களெந்தைநாமங்கள்கொண்டுதாள்
வணங்கிநின்றுநாமங்கைவாழ்த்துமே. (உசு)

பங்கயஞ்செறுபதநினைந்துபூ
மங்கைநின்றுபொன்மாரிதூவுமே. (உ.எ)

தானசக்ரமற்றுயிர்தனைப்பெறு
ஞானசக்ரமெங்கணுநடக்குமே. (உஅ)

மங்கைபாகன்மகுடம்பெறுமவன்
கங்கையாதிவெண்கவரிவீசுமே. (உகூ)

வரர்கணங்களுமறைகளுமச்
சுரர்கணங்களுந்தொழுதுபோற்றுமே. (ஙo)

வேறு

ஞானகேதனஞ்தன்னைவழங்கிட
நாலுதிக்கினுங்கட்டவவையுமக்
கானகேதமறுக்குமம்பொற்கழ
லடையவாருமென்றுலித்தழைக்குமே. (ஙக)

வேறு

ஆருணாக்கவலாரவன்றன்பத
மப்பெருந்தகையிப்புவிமேவிய
கூரிருட்டனவாகத்துமோகனைக்
கொன்றுநுங்கள்குறைதீர்க்குமென்னவே. (ஙஉ)

திருவபிடேகம் முற்றிற்று.

ஆ பாட்டு - சுகசு

---

மோகன் சரிதை.

மோகனுகுமவனுனொனவவன்றன்வரவு
முனிவருய்ந்திடவவன்குலனடங்கமுனியு

மேகனுமிறையுவந்தருள்விவேகன்வரவு
 மிருவர்செய்தியும்விளம்புமறையென்றருளவே. (க)

உண்டுமில்லையுமிரண்டுமலவாகிமனவாக்
 குன்னலோதலருமாயையுளவுண்மையுணர்காற்
பண்டுமில்லையிதுவந்தபடிசொல்லவுளதோ
 பகருதாகரணமோர்புடையதேபகர்வதே. (உ)

வெய்யவன்கணுளதாயவன்மறைந்திடவெழு
 மேகமேயெனவிளம்பவிரகின்றிமனனஞ்
செய்யலின்றியுளவொண்சுடர்முன்மாயைசனனஞ்
 செய்துமூடுமதன்மேனிதெரியாதவகையே. (ங)

ஓசையாதியுலகானபரிசென்னவொருதன்
 னிலையினின்றுணர்வின்மாயையொடவிஞ்சைபுணர்வா
லீசனுகியுயிராகியுயிரானவவனே
 டின்பமாகியறிவின்மையெனுமாதிசையவே. (ச)

அறிவிலாமைபெறுமைமந்தன்மனமந்தமனனுக்
 கானபன்னிகளபேட்சையுமபேட்சையுமெனப்
பிறிவின்மோகன்முதல்வந்தனரபேட்சைமடவாள்
 பெறவிவேகன்முதல்வந்தனருபேட்சைபெறவே. (ரு)

பந்தமாநெறியைமேவியவபேட்சையைமனம்
 பற்றிமுற்றுமவள்பெற்றவர்கள்கொள்கவெனவே
யந்தமோகனசுரேசனரசாளவதனு
 னறிவிவேகன்முதலானசுரராறுவர்களே. (சூ)

அவுணரொன்பதடன்மோகன்முதலாமறவரோ
 யமரரென்பதுவிவேகன்முதலாமறவரோ
யிவணமிங்கிருவர்வம்சவரலாறுமெனவே
 யென்னைமோகனரசாளவுலகெய்துதுயரோ. (எ)

வேறு

ஆனகேதமெல்லைசொல்லவறிஞரில்லைசிறிதியான்
மீனகேதனுதியால்விளைந்தவாவிளம்புகேன். (அ)

குடர்வழும்புதொடர்நரம்புகுருதியென்புகுழுவுமங்
கடல்வழங்குவமிர்தமிந்தமகளிரொன்பர்கவிகளே. (கூ)

வேரியாரியுண்டுவண்டுஞிமிறுமிண்டுமடையவேழ்
வாரிவாரியுண்டவம்புவாகமென்பர்மயினாயே. (௧௦)

மயல்கொடம்பையுமிழகின்றகுமிழியென்றுமதிகொளார்
கயல்களென்பர்பிணைகளென்பர்கணைகளொன்பர் கண்ணையே.

துரிசுதுன்றுகபம்வழங்குதுளைசெய்துண்டமதனையே
பரிசில்கொண்டுகவிசனங்கள்குமிழதென்றுபகர்வரோ. (௧௨)

மலவொழுங்குமலியநின்றவதரம்விஞ்சமதனனோ
விலவதன்றுதளிரதன்றதிந்திரகோபமென்பரோ. (௧௩)

பல்லையென்றுமென்பெனுதுபவளமுட்பொதிந்தகூர்
முல்லையென்றுமுறுவலென்றுமுத்தமென்பர்பித்தரோ. (௧௪)

கலர்நிறஞ்செய்வதனம்விஞ்சுகபம்விளைந்தகவினெனுர்
மலர்நிறைந்தமறுவொழிந்தமதியமென்பர்மயல்கொடே. ()

மருவிசந்துதொறுமெலும்பென்மதியதின்றிவளைகொடோ
டருவுலர்தவிளகுமுய்ந்துதமுவிலென்றுவிழுவரே. (௧௬)

பிணிசெய்கின்றவரலையென்பில்பிசிதபிண்டமுசிதமா
யணிசெய்கொங்கையமிர்தகும்பமெனவிரும்பியணைவரோ. ()

அபசதங்களுபயரந்திரமவைசொரிந்தவறியினு
மிபசிரங்கடடகிதம்பமெனவியம்பியிடுவரோ. (௧அ)

அரிபரந்தவிழியிலன்பரதிபயஞ்சொலளவதோ
பரிபுரஞ்செய்பதயுகங்கள்பணியுவந்துபணிவரோ. (கக)

வேறு.

ஓராதவன்பருறுகாதலென்னையுரைசெய்தல்யாதுமுணர்வோ
ராராதவன்புமடவார்திறத்தினலையாழியேழினளவே. (உ0)

உளஞ்செய்துகொண்டமடமாதிருக்க
விலைமாதர்தாமுமுளராக்
களஞ்செய்வர்காதல்பெரிதாகியேதில்
குலமாதர்தங்கள்கவினே. (உக)

வேறு

வார்த்தைவேறுசெயல்வேறுவஞ்சமா
மனனும்வேறுபடமாதர்வைகலுந்
தூர்த்தசேர்வைசெயவன்புசெய்வரே
சுத்தமாவர்சுத்தாரமாகவே. (உஉ)

உருவநங்கனகையார்வன்ப்பிலா
ரும்பர்கீசரெனலற்றுளன்கொள்வா
ரிருமனஞ்செய்மடவார்தனத்தையே
யிளையர்மூப்பரிவரென்றுமில்லையே. (உங)

வேறு.

கிறியினிற்பாவையர்களுறுதுவக்காடவர்கள்
கிளரவொட்டாதநரகென்
றறியவுற்றுருமுறவணவதப்பாழுருவி
லருவருப்பானவிடனே. (உச)

இறுகவப்பாவையர்க டழுவவித்தாசைபக
லிரவுழைத்தாவியிறவே
யுறுகவுற்றுலுமிவரொழியகிற்போமெனுணர்
வொருகணப்போதுமிலவே. (உரு)

வேறு

சீறுவர்யாவரோடுமேடவார்கள்காதல்
பொருள்காதல்சிந்தைசெயவே
கூறுவர்வாய்மையல்லபடிறேநினைப்பர்
கொலைசெய்வர்கோபமிகவே. (உசு)

பாகுதிவந்தோறுண்டுபரிவோடுநல்கு
மவரோடுசெய்வர்படிறே
யாகுதிபண்ணவன்போடணைகின்றவன்கை
யடுகின்றவங்கியெனவே. (உஎ)

புற்புதமென்னவிந்த்ரதனுவென்னவிந்த
வுடல்பொன்றல்கண்டுநிறைபொன்
வெற்பதுவிந்துவென்னும்வகைதேடினுநு
மமையாமலாசைமிகுமே. (உஅ)

நொந்தொருகுன்றுகுன்றில்விலைசெய்வர்தம்மை
நுகர்வேநினைந்துநுகர்வர்
வந்தொருகுன்றியொன்றின்மதிசெய்வர்தம்மை
யொருவச்ரபாணியெனவே. (உகூ)

வேறு

புலைசரிந்தகுலனைநின்றுபுகழ்வதுஞ்செய்துவகையாற்
தலைசரிந்துதொழுவரொன்றுதருவனொன்றுதமதுளே. (௩0)

வேறு

அருந்தலும்புணர்ப்புமன்பரானவானவாசையால்
வருந்தலென்றுமுள்ளதாபமாதவத்தினில்லையே. (௩க)

வேறு

பிறன்பொருள்கவர்ந்துகொளுமாறது
நினைந்தறிவுபேசும்வகையே
யறம்பொருளெனுங்கலைகள்கற்பது
மதற்கிசையநிற்பதுவுமே. (௩உ)

அருந்தவவெழுந்துலகடங்கலுநடந்தணி
நடஞ்செயலினே
ரிருந்தவவுடம்புகொடிடந்தொறு
மிடந்தொறுமிசைந்திடுவரோ. (௩௩)

வேறு

தெளியமாதிமுதலெட்டியோகமுஞ்
செய்துசெய்வர்பொருடிவவிரா
வெளிசமாமலதுமுத்ராமைதுனம்
விடியுமெல்லவினியோகமாகவே. (௩௪)

சிந்தைமாதராயலான்மறந்துமொரு
தெய்வசிந்தனேசெயார்களே
தந்தைதாயர்முதல்குரவரோவல்செய
மைந்தரானவர்கடவிர்வரே. (௩௫)

கொண்டகேள்வனேயொழிந்தொருத்தனெடு
கூடிவாழ்வர்குலமாதரோ.
பெண்டிர்காதலொடும்வாடவாடவர்கள்
பிறனில்வீழ்வர்பிழைபெருகவே. (௩௬)

ஒழுக்கிலாதவரொழுக்கமுள்ளவர்
தவங்களேப்பழுதுரைப்பரோ
வழுக்கிலாவறிஞரறிவிலார்களென
வறிவின்மானுடவரறைவரோ. (௩௭)

அரசர்நீதிகெடவாழ்வர்தங்களே
யடைந்தவர்க்கருள்செயார்களே
புரைசெய்தானேயரசலாயமைச்சரடு
போர்க்களத்தினறைபோவரோ. (௩௮)

உறுபயன்சிறிதுமின்றியும்பிற
ரிடும்பைகண்டிடவுவப்பரே
பெறுபயன்கருதியுறவுகொண்டவர்க
ளிரவுகண்டுநனிபிரிவரே. (௩௯)

வேறு

குடும்பைச்சிந்தையொழியக்குரம்பைநோ
யிடும்பைச்சிந்தநினைவென்பதில்லையே. (௪0)

ஊக்கக்கேட்டினுளத்தநலன்பிற
ராக்கக்கேட்டினெரியுமவியுமே. (௪௧)



பட்டவாகம்பதைப்பதுபார்க்கவே
விட்டவாவென்னவேலைவிடுவரோ. (௪௨)

குமுதமெங்கணுமானதுகோதறு
சமதமங்களொளித்ததுதப்பியே. (௪௩)

மோகமூட்டிமொழியியமாதியா
மியோகமெட்டுமொளித்தனவோடியே. (௪௪)

வீட்டின்மேவும்விருப்பம்வெகுண்டுபோய்க்
காட்டின்மேவிக்கரந்துதிரியுமே. (௪௫)

காந்தவெஞ்சினக்காயெரியுள்ளது
சாந்திதாந்தியிழந்துயிர்தன்னொடே. (௪௬)

வேதநான்கும்விளங்கியவாகம
பாதநான்கும்வழங்கிலபாரிலே. (௪௭)

எங்குமுள்ளதிறையருளன்றியப்
பங்கமுள்ளபொய்ப்பாடாண்டநூல்களே. (௪௮)

வர்க்கமிட்டவெம்மார்க்கமும்வாதுசெய்
தர்க்கமிட்டுத்தடியடியானதே. (௪௯)

வேறு

அந்தரமிகவிளைந்ததுவன்பருளறமகன்றன
மந்தரமலைமறைந்தனமந்திரவுபநிடங்களும். (ருo)

இந்திரவுலகெனும்படியெங்கணுமதனினின்புறு
தந்திரநலமடந்தையர்தங்குலமிகவிளைந்தது. (ருக)

மங்கையர்செயும்வரம்பறுமங்கலகலகமெங்கணுஞ்
சங்கையைவிடநிலம்பலசங்கரகுலம்விளைந்தது. (ருஉ)

அந்தியுமறமறந்தனரந்தணர்சிலர்குளம்புகக்
குந்தியகுளிபிறன்பொருள்கொண்டிடுமபிமதங்கொடு. (ருங)

முந்தியமறைமொழிந்தவர்முன்ஞெழும்வகைமொழிந்திடப்
புந்தியினிடைபுகுந்ததுபொங்கெரிதிரிவிதங்களும். (ருச)

வேறு

உரைசெய்மறையன்றிமற்றுழவருணவொன்றறுத்
தரசர்பொருள்கண்டிடற்கமைவரவர்நின்றழ. (ருரு)

புகைவரவொழிந்திடப்பொருண்முழுதுகொண்டுவெம்
பகைவரவழிந்திடப்படர்வரறுவெஞ்சுரம். (ருசு)

அரிகளுமிழ்வெஞ்சமத்தவளையடலின்றிநற்
பரிகரியிழிந்துகைப்படைவிடுவரஞ்சலில. (ருஎ)

குலவணிகரன்புடைக்குரவர்பொருளென்றிலைச்
சிலவணுகிலங்கதிற்சிறிதுகொளல்சங்கையில. (ருஅ)

வேறு

வஞ்சமொன்றுமொழியவணிகர்த
நெஞ்சிஞென்றுபிறிதில்லைநிற்பதே. (ருகூ)

அவம்புரிந்துதிரிவார்களந்தணர்
தவம்புரிந்துதிரிவார்சதுர்த்தரோ. (சுo)

வேறு

பாதமோதியேவல்செய்தபனவனைப்பழித்துநால்
வேதமோதிநீசசாதிவிப்ரசாதியானவே. (சூக)
மறையவுண்கைதவிரவின்பவகுளகந்தமதுவெனு
நிறையவுண்டுவிப்ரசாதிநீசசாதியானவே. (சூஉ)

வேறு.

சொல்லுவானரிதுமோகசேனைசெய
லென்னவேசுருதிசொல்லுவான்
வெல்லுவானவனையிறைவரும்படி
தவஞ்செய்வான்விறல்விவேகனே. (சூங)

தவத்தினுற்பெறும்விவேகன்முன்பிறைவி
தான்மொழிந்தருளுதம்பிரான்
றிவத்தினுர்தொழுசிவப்பிரகாசனிரு
செய்யசெம்பொனடிசேரவே. (சூச)

வேறு

தேராவிவேகங்கொடுபொருமோகன்
சுராசுரேசருந்தொலையத்தொலைப்பதுந்
தேராவிவேகன்சிவப்பிரகாசன்
பதத்தின்விண்ணப்பஞ்செய்யுமளவே. (சூரு)

வேறு

அடிவணங்கினதிஞர்கடம்பிரா
னமரின்மோகனுஞ்சேனையுமாருயிர்
மடியுமென்னுமளவோவவற்றரு
மனமுமாயுமாமாயையுமாயுமே. (சூசா)

ஒன்றுகூறுமுபநிடமெம்பிரா
னுருவுகொண்டதுறுதுயர்தீர்க்கவோ

வென்றுகூறவிரும்பசிதீர்ந்தபோ
லின்பமெய்தியிருந்தவளவிலே. (சுஎ)

மோகன்சரிதை முற்றிற்று.

ஆ விருத்தம் சஅக

---

ஏகன்றிருப்பவனி.

ஆண்டானடியருளெய்தவிவேகனடன்மோகன்
மாண்டானுயிரொன்றங்கொருவிச்சாதரன்வந்தே. (க)
பாதந்தன்றலையிற்கொடுபரவப்பழமறைதேர்
மாதந்தவனிருசேவடிவந்தித்துமகிழ்ந்தே. (உ)

வேறு

என்றவப்பயனெம்பிரானருளின்மோகனுருயிரிழக்கவே
வென்றவப்பரிசெலாம்விளம்புகென வேதொடங்கினன்விள
[ம்பவே. (ங)
வானநாடருமனித்தராகவழிதேடவீடுபெறமண்ணிலே
ஞானநாயகன்மலர்ப்பதந்தனைவழங்குநாளினொருநாளிலே.

வேறு

ஓடிவில்பரவின்பமுறவுரியபரவிஞ்சைமகள்
கலவியையுவந்தவுரவோ
னடியவர்கள்சங்கதுதியதிரவணிசங்கமெழ
வறிதுயிலுணர்ந்தருளியே. (ரு)

கண்புனலுமார்வமும்வழுத்துமிசைமாலையு
மழுத்தமுறுகாதலடியா
ரொண்புனலுநாண்மலருமொக்கவிரவிப்பரவு
மர்ச்சனையுவந்தருளியே. (சு)

வேறு.

சிவேகநாதசிவபோற்றிசெம்பொனடிபோற்றி
போற்றிசயசயவெனு

விவேகனுதிகளுமடியர்தம்மொடு
முனிக்கணங்களும்விரும்பியே. (எ)

புவியுளார்மகிழநீதிருப்பவனிபோதநின்கழல்கள்போற்றவே
ரவியும்வானவர்கள்யாரும்வந்தனர்க
ளெந்தைகாட்சியருளென்னவே. (அ)

வேறு

மேதகுசந்தும்பளிதமுநெய்யு
மிருகமதமுஞ்சேர்விடுபனிநீரின்
சேதகமுந்தற்சேர்ந்தவர்நெஞ்சிற்
சாந்தமுமெய்யிற்சேரவணிந்தே. (கூ)

செங்கழுநீர்கொண்டன்பர்செயும்பூ
மாலையோடுள்ளஞ்சேரநுராகத்
தங்கழுநீர்கொண்டன்பர்செயும்பா
மாலையுமார்பத்தாரவணிந்தே (க0)

ஆருரவாரிங்கயலெனவுள்ளத்
தறிஞருமாயாவகையவரோடும்
போருறுமோகன்கிளையொடுபொன்றிப்
போகமிதிக்கப்பொற்கழலிட்டே. (கக)

குடிமுழுதாளக்குவலயமேவுங்
குருபரனுர்தங்கருணையொடுஞ்சே
வடிமுதலாகத்திருவபிடேகத்
தளவுமணிப்பொற்பணியுமணிந்தே. (கஉ)

சேமிசையானுந்தூய்மறைநாலுந்
திருநெடுமாலுஞ்செவ்வரவிந்தப்
பூமிசையானுங்காமுறுஞானப்
போதகமேலேபோதருபோதே. (கஙு)

வேறு

நடுமதிவரப்புவனிதலமதிசயிக்கவொளிர்
நலன்மருவுமுத்திவரவே
யுடுமதியொளிக்கவடியவர்மதிகளிக்கவுய
ரொருகுடைநிழற்றிவரவே. (கச)

சாமரமுழக்கமுயிர்சாமரபொழிக்கவல
தாமரையுகத்தினலனூர்
சாமரமனுக்கருகுதாமரைமுகத்தியர்கள்
சாமரமிரட்டிவரவே. (கரு)

விடைகருடனன்னமுதலாகவெழுதுங்கொடிகள்
பின்புவரவிண்ணவரெலாந்
தொடரவரிதென்றுமறைமொழியறிவெனும்பெரிய
துவசமுமுயர்த்துவரவே. (கசா)

ஏகன்றிருப்பவனி முற்றிற்று.

ஆ பாட்டு - சகஎ.

---

பரவுதல்.

இரவிமதிபிரமன்முதல்சுராவனிசுரர்முனிவ
ரொழின்மறைகள்சயசயவெனப்
பரவிவருமரவமொடுபரவையெனவடியவர்கள்
பரவிவருபரிசுபகர்வாம். (க)

வேறு

காதலினேந்துருகியமுமடியார்தங்கள்
கண்ணின்றும்பேராதகண்ணேபோற்றி
போதலையும்வருதலையுமொழித்துஞானப்
புரணமாய்வேதிக்கும்புனிதாபோற்றி. (உ)

பொய்யர்க்கும்பொய்யானபூதபேதப்
பொருளாயுமிருளாயும்புரிந்தாய்போற்றி
மெய்யர்க்குமெய்ஞ்ஞானவநந்தானந்த
வொளியாகிவெளிப்பட்டவேந்தேபோற்றி (௩)

ஆதியுமாயந்தமுமாய்நின்றாய்போற்றி
யாதியந்தமில்லாதவமலாபோற்றி
சோதியுமாயிருளுமாய்நின்றதூய
சொரூபானந்தச்சுடரேபோற்றிபோற்றி. (௪)

அனைத்துலகுநின்பாலாயழியவாக்க
மழிவென்றுமறநின்றவாதிபோற்றி
நினைத்தவடிவாய்நிகழ்ந்துநின்றாய்போற்றி
நினைப்பிறந்தாருள்ளத்துநிதியேபோற்றி. (௫)

காரணத்தின்காரணமாய்க்கழன்றாய்போற்றி
கண்களிக்கும்படிவந்தகழல்கள்போற்றி
யாரணத்தின்மெய்ப்பொருளாமறிவேபோற்றி
யடியவரங்கைக்கனியாமமிர்தேபோற்றி. (௬)

கல்லாமைகற்பித்ததாளாபோற்றி
கண்ணிற்குங்கண்ணனகண்ணேபோற்றி
சொல்லாமற்சொல்லிறந்தபரமானந்தச்
சுடர்திகழச்சொல்லவல்லசோதிபோற்றி (௭)

ஆவியாயனைத்துயிர்க்குநின்றாய்போற்றி
யறிவறியாமையைக்கடந்தவறிவேபோற்றி
பாவியாப்பாவகத்தினிருந்தாய்போற்றி
பற்றற்றார்பற்றநின்றபற்றேபோற்றி. (௮)

போகமும்வீடும்புரக்கும்புனிதாபோற்றி
போதுக்குப்போதுநலம்புதிதாய்போற்றி

யேகமுமாயநேகமுமாயிருந்தாய்போற்றி
  யெல்லாமாயல்லாதவிறைவாபோற்றி. (௯)

பரவுமவருளத்திருந்தபதியேபோற்றி
  பந்தமும்வீடும்படைத்தபரனேபோற்றி
யிரவுபகலறவருளுமெந்தாய்போற்றி
  யிப்பரிசென்றியம்பரியவிறைவாபோற்றி. (௧0)

முத்திக்குவித்தானமுதல்வாபோற்றி
  மொழியிறந்தவானந்தமூர்த்திபோற்றி
சித்திக்குஞானகனத்தேனேபோற்றி
  சிவப்பிரகாசக்கனியேபோற்றிபோற்றி. (௧௧)

வேறு

அன்னையையினிக்காணுமேயடைந்தவர்க்கமிர்தாய்நின்று
தன்னையேயளிக்கவல்லதம்பிரான்போற்றிபோற்றி (௧௨)

துய்யசேவடியான்மாயைத்துகளறத்துகைக்கவல்ல
செய்யசேவகனேபோற்றிசிவப்பிரகாசாபோற்றி. (௧௩)

இப்படிமறைகளுலும்யாவரும்போற்றவீச
னப்படியிலாதபொற்றுளணங்களுர்வணங்கிவாழ்த்த. (௧௪)

வேறு

அன்றுலமுண்டானிவன்காணுமென்பா
  ரருளல்லவோர்வுள்ளதெல்லாமவன்பாற்
சென்றுலிரங்காதிரானென்றுசொல்வார்
  தெரியாதுபெரியோர்கடிருவுள்ளமென்பார். (௧௫)

அளியொன்றுதோண்மாலைதரவேண்டுமானே
  யஞ்சாதுபின்செல்லயாமார்கொலென்பா
ரெளியன்கிடீர்நல்லமெய்யன்பரோடே
  யேத்திப்பணிந்தாலிவன்சாலவென்பார். (௧௬)

அங்கண்ணனென்பார்திருக்கண்களன்றே
வடிபேணுநம்மாவியடுகின்றதென்பா
ரெங்கண்ணின்முன்னேயிவ்விறைவன்கணின்று
லெங்கேயொளிப்போமிவர்க்கென்றுரைப்பார். (கஎ)

தனுக்கல்லைமுன்செய்ததனிவீரனென்பா
தன்காலின்வீழத்தடங்கண்களாலே
மனக்கல்லையெல்லாம்வளைத்தாளநேரோ
வல்லான்முனெக்கற்கள்வளையாதவென்பார். (கஅ)

நாமாதுமுற்செய்ததவமென்கொலென்பார்
நாமாதிவன்றன்னைநாவாரவாழ்த்திப்
பாமாலைசாத்தும்பதம்பெற்றுநின்றுள்
பாரீரிதார்பெற்றபதமென்றுபகர்வார். (கசு)

பொன்மேனிகண்டார்கடன்மேனியாகப்
புரக்கும்பிரானென்றல்பொய்யன்றுமெய்யே
யென்மேனிபொன்மேனியாய்விட்டதென்பா
ரிப்பேறுபெறுவார்கள்யாரென்றிசைப்பார். (உ௦)

வேறு

முடியாதபதத்தைமுனிக்கு
மொழியாமொழியாளிபதத்தே
கடியார்மலர்தூய்த்தொழுகிற்பார்
கையென்னதவஞ்செய்ததென்பார். (உக)

மரணப்பிறவித்துயர்தீரமருந்தென்றுவணங்கிவணங்கிச்
சரணப்பதுமத்தலைவைப்பார்தலையென்னதவஞ்செய்ததென்
[பார் (உஉ)

புரணப்பரிபூரணபோதப்
பொன்மேனிபுலப்படநல்குங்

கருணைக்கழல்கண்களில்வைப்பார்
 கண்ணென்னதவஞ்செய்ததென்பார். (௨௬)

பேயாகியவெம்மையுமாளும்
 பித்தாவெனவொத்தனபேசி
வாயாரவும்வாழ்த்தியுகப்பார்
 வாயென்னதவஞ்செய்ததென்பார். (௨௬)

காயாலயமேவியிருந்துங்காணுமன்மறைந்துறையுங்காண் [ர்.
மாயாவெளிவந்தனையென்பார் மன்றுவெளிவந்தனையென்பா
நீராயுகுவார்துதிசெய்யாநிற்பாருனையிப்படிகாணில்
வாராதபதம்பெறவேண்டேம்வரமீதெனவாழ்த்தியுரைப்பார்.

வேறு

தேனனையசொல்லியருமாதவருமிங்ஙனிரு
 சேவடிநயந்துசெலவே
வானனையவன்குமரைமாநகர்வலஞ்செய்திறை
 மாளிகைபுகுந்தருளியே. (௨எ)

வடிவுகொடுவந்தவருள்கருதுதொறுமன்பரிரு
 மலர்விழிவழங்குபுனலே
படிவதுவுமன்றிமிகுபரிமளசுகந்தமுறு
 புனலிடைபடிந்தருளியே.. (௨அ)

இனியவடியார்துதியெனமுதுசெவியுண்ணவிழி
 யிவர்களுயிருண்ணுமிறையோன்
கனிபவளவாயுலகவமுதொழியவின்சுவைகள்
 கமழடிசிலுண்டருளியே. (௨௯)

மருடருபவஞ்சிதையவந்தனைசெய்பூசுரரு
 மாதவரும்வேதமெனுமா

புருடனும்விவேகனெடுபொன்மலர்கள்சிந்தியடி
போற்றிடவிருந்தபொழுதே. (௩௦)

## பரவுதன்முற்றிற்று.

ஆ பாட்டு - ருஉஎ.

---

## நிபதியுரைத்தல்.

தீர்த்தனெனையாளிதிருமுன்பிறைபதங்கடுதி
செய்துபணிசெய்பவனாயு
மேத்தவினையாரையுமியம்பெனவிவேகனதி
காரியையியம்புமவனே. (க)

வேறு

சுருதியாயிரமுகங்கள்கொண்டிறைவ
தூயநின்கழல்கள்பாடுமே
மிருதியாகமபுராணகீதையிதி
காசமிப்பரிசின்மேவுமே. (உ)

அமையுமாறறியுமுனிவர்பேணுவது
நின்னையேயயலிலாமையால்
சமயமாறுமொருநின்னையேயிறைவர்
தாமுவந்தபடிதாழ்வதே. (௩)

நாளுநாளுநினையஞ்சிவானமிசைஞாயிருதிவருகின்றவக்
கோளுநாளுமுனநீவிதித்தவிதியேநடப்பர்குலையாமலே. ()

உழலுமாருதமுமிறைவநின்றுவலி
செய்வதுன்வலியையுட்கொடே
யழலும்யாவுமடுவதுமடைத்தபணி
யென்றுநின்னைமிகவஞ்சியே. (ரு)

வருணனின்றுபணிசெய்யுநின்னைமிக
  வஞ்சிநெஞ்சினிடைவள்ளனின்
சரணபங்கயமிலாமையேகொடுமை
  செய்வதுந்தருமராசனே. (சா)

ஏத்தியெண்டிசையிலமரர்யாவருநின்
  னேவல்செய்யுமவரின்பமா
மூர்த்திநின்பணியலாதுவேறிலது
  மூவருஞ்செய்துமுடிப்பரே. (எ)

விண்ணுளாருமவர்கோவுமற்றுளரும்
  வேறுவேறுலகில்யாவரு
மண்ணுளாருநினையன்றியாவரை
  வணங்குவார்கருணைவள்ளலே. (அ)

வேறு

ஏகநின்கழலேவல்செய்யாதவரில்லையே
மோகனின்கழலேவல்செயானெனமூர்த்தியே. (கூ)

நியதியுரைத்தன்முற்றிற்று.

ஆ பாட்டு - ருகூ.

---

தூது.

மோகனெனுமைந்தனைநமேவல்செயவென்றுநல
  மொழியவலநியாயமகனைப்
போகவெனவங்கவனையெய்தியவனோதவருள்
  செய்தவைபொருந்தும்வகையே. (க)

உன்னில்வலிமிக்கவர்கண்மோகவரசேயொரு
  சுராசுரருமில்லையுலகத்
தென்னினுநினக்குறுதியாவதுவிருப்பினொடு
  யான்மொழிவதற்கிசைவதே. (உ)

வேறு

அழியாதநீதியறியாமோகனள
வறிந்துசேரவழையென்னவே
வழியாறிஞென்றின்மதியானநீதி
மகன்முன்னியேவன்மொழிவான். (௩)

வேறு

மங்கையொருபாகனெடுமாலயனதாலயமு
மாதவர்கண்மன்னுவனமுங்
கங்கைநதிபொன்னிநதிகன்னிநதியின்னமுள
நன்னதிகளின்கரைகளும். (௪)

இயமநியமாதியெனுமெண்வகையியோகமு
முயற்சியோடியற்றியிடர்தீர்
சயமுனிவர னவர்கள்சாந்திமுதலாரொடு
தனித்தனியிருக்குமிடமும். (௫)

பாதமிறையோனருளிலேயகிலவுயிருருவு
பழையவறிவாவதெனுநால்
வேதமிவைதன்னெடுபுராணமிதிகாசமுடன்
மிருதிகள்விளங்குமிடனும். (௬)

தூரதரமானகலைசாரதரமானவை
தொகுத்துமுனிசொல்லியமகா
பாரதமும்வேறுமுளவேதநெறிமாதவர்
பகர்ந்தனவழங்குபதியும். (௭)

சாதனசதுட்டையநலந்தனையலம்பெற
வடைந்தவர்கடன்னையறியும்
வேதனவிருப்பினர்பொருந்துமிடம்யாவையும்
விவேகனரசாளவிடவே, (௮)

என்னுடையநாதனருள்செய்தவிவைவிட்டிதர
பூமிபுகின்மோகவரசே
யுன்னுடையவாவியுனதாகுமுறைசெய்ததி
னுணர்ந்துகொளுனக்குறுதியே. (கூ)

காதிவருமாறுசமயக்கடவுளாருமிறை
கண்ணுதல்முகுந்தனயனென்
றோதிவருதேவர்களுமாகநினையாதவர்க
ளும்பனவனென்பதுணரோ. (கO)

உதித்தகுலமொன்றிறைவனுக்கிருதிறத்தவரு
மொக்குமெனவோர்பொழுதுநீ
மதித்தலொழியோர்குலமறம்பெருகுமைவரு
மறம்பெருகுதூற்றுவருமே. (கக)

வேறு

குவளையாம்பலரவிந்தமுற்பலகுலங்களேதருசலங்களே
தவளையாமைசடமுதலைநீரரவுதன்னையுந்தருவதன்னிலே. ()

தெருளுறும்படிவிசும்பின்மீதுலவுதிங்களுமிறுங்கோள்களே
யிருளுறும்படியதன்கணேயுலவிராகுகேதுவுங்கோள்களே.()

கறுத்ததாகிலுநிகர்க்கநின்றிலது
கோகிலத்தினொடுகாகம்வெண்
ணிறத்ததேனுமடவன்னமுங்குருகு
நீரில்வாழினுநிகர்க்குமே. (கசு)

மலையமுங்கயிலையிமையமந்தரமுமலைகளேபிறவுமலைகளே
மலையின்மங்கைகலைதிருவருந்ததியுமகளிரோபிறருமகளிரோ. ()

கங்கைகாவிரியுநதிகளேகானியாறுகளுநதிகளே
மங்கைபாகனுங்குரவனேமற்றுளார்களுங்குரவரோ. (கசு)

நந்தகோபன்மகன்மனுடனேநாட்டினுள்ளவருமனுடரோ
யிந்துசேகரனுமீசனேயேனைவானவருமீசரோ. (௧எ)

வேறு

சொல்லேமறையும்பிறவுஞ்சொலவே
சுடர்மாமணியுஞ்சுரனூர்மலையுங்
கல்லேயிறைபேணும்விவேகனையுங்
கருதாகினையுங்கருதிப்படியே. (௧அ)

கீழ்மேலுளதோவிறைவற்கெனினீ
யவருக்கிலகேடறுசெய்யமலர்த்
தாண்மேல்விழுமாதவர்மேலவர்கி
ழவராகுவர்தாளில்விழாதவரோ. (௧௯)

நீயும்பெருமானடிபேணுதியே
னெடுவானுலகங்களுநின்னரசே
யாயும்பருநின்னைவணங்குவர்நீ
யறிகின்றிலையெந்தைதனாருளே. (௨௦)

வேறு

என்றுநின்றவனியம்பவழலென்னவிழியா
வேகனேவல்செய்விவேகனரசாளவரவே
நன்றுநன்றினிவிவேகனலனம்பகைவனன்
றுதனென்றிவன்மொழிந்தவனமக்கெதிரியே. (௨௧)

மோகன்யானெனதுதந்தைமனனிந்தவுலக
மூன்றுமென்றனரசாக்கினன்மொழிந்தவிறையோ
னேகனுமவனிலென்னிலிகலிற்குவலியார்
யாவனென்றினிபியம்புகவெனக்கிசையவே. (௨௨)

வேறு..

ஓதியொருத்தனல்கவதனத்தைநல்க
வளாமார்பொருத்தனுடலிற்

பாதியொருத்தனல்கமகளிர்க்கொறுத்த
படைமாரன்யாவர்படையே. (உ௩)

அரியரனென்றுகூறுமறிவோரரக்க
ரசுரோசரவகளமர்செய்
தெரியெழுவித்தகோபனெனதேவலன்றி
யெவரேவல்செய்வதிஙசயே. (உச)

சிறியனுமாயிரக்கநெடுமால்சிறந்தபரமீசனுனசிவனே
வறியனுமாயிரக்கவடலோபனின்று
வலிசெய்வதார்சொல்வழியே. (உ௫)

வேறு

அதமன்னசமன்னதன்மன்னசுபன்
னதபன்னபரன்னகிர்பன்னயமன்
மதனுன்மதன்வஞ்சகன்விஞ்சியதுன்
மதிசம்ப்ரமன்மந்தனென்வம்சகனே. (உ௬)

ஆகாதனசெய்பவனக்ஷமனு
யாசன்னபிமானியபாயனகன்
சோகாகரனுகுலிதுக்கசுகத்
தொந்தனபயன்விஸ்மயனூர்துணையே. (உஎ)

குரூரன்குருநிந்தகனந்தன்மகா
குபிதன்கிர்பணன்குவிர்தன்னவிர்தன்
சோரன்பரிவாதிசுகிர்ப்பிசிதன்
சுரவிர்த்தனதிப்ரமனூர்துணையே. (உஅ)

தேகன்பரதுக்கசுகன்கபடன்
செடிலன்குடிலன்டம்பன்விடயோச்
சாகன்னதிசாகசிகன்னசகன்
சபலன்விபலன்னிவரார்படையே. (உக)

கோரன்வெகுமானிகுடும்பதரன்
குணநிக்ரகன்விக்ரகமேவியசிங்
காரன்னலசன்விவசன்கலகன்
கலன்மத்யமனூர்படைகட்டினாயே. (கூ0)

வேறு

அஞ்ஞசனசங்கதனுமார்யசனநிந்தகனு
மந்தரனுமந்தணர்மகா
யெஞ்ஞபரியாசகனுமான்மபரிமோசகனு
மெங்கள்படையென்றுகருதே. (கூக)

விந்நியதராசதனுமுன்மத்ததாமதனு
நிட்டுரனுமித்ரசடனு
மந்நியப்ரதூஷகனுமான்மப்பிரசஞ்சகனு
மப்ரதனுமியாவர்படையே. (கூஉ)

அநர்த்தவிடயத்திலநுமோதனனுநீசனு
மநர்ச்சகனுமிந்திரியகனு
மநித்தியசுகசங்கதனுநித்தியசுகவர்ச்சனனு
மயமனுமியாவர்படையே. (கூகூ)

பயப்ரதன்மகாசனபராயணன்மலன்பர
தனக்கிரகணபண்டிதனொடே
யயக்யனுமெசப்பரிநிவர்த்தகனுமஞ்சனு
மசச்சனனுமியாவர்படையே. (கூச)

மனோரதனுமத்ரவனுமாதுர்பிதிர்வஞ்சகனு
மச்சரனுமாதருடனே
விநோதனுமசற்பரனும்விவர்தனும்விகற்பனும்
விதர்மகனுமார்விதயரோ. (கூரு)

வேறு

அதிப்ரதாபனுமதிப்ரமாதனு
மார்த்தயேதுவுமபத்தனு

மெதிப்ரகோபனும்வெகுப்ரலாபனு
 மிருக்கயாரெனையெதிர்ப்பரோ. (௩௬)

சிநேகசாகசன்னித்தியவர்ச்சன
 னீதிவர்ச்சனனித்தியசேவகன்
றேகபோஷணன்போகபூடணன்
 வேததூடகன்யாவர்சேனையே. (௩எ)

வேறு

சுற்பிபாசாபரவசன்றூர்ச்சனன்
 சுத்ரகன்மன்குதர்க்கன்கிருதக்ன
னற்பசாரனனந்ததுக்காகர
 னநிர்தனிந்தகனூர்துணையாவரே. (௩அ)

அப்ரசன்னனசுசியசாந்தக
 னசற்ப்ரலாபனநித்யநியமிதன்
விப்ரதூடகன்வேதபராமுகன்
 விடயசம்முகன்யார்படைவீரரோ. (௩௯)

பிராணஹிம்சாபரன்பரதார
 பரனசூயாபரன்கரணசவாக்
கிராணனுசாபரன்பரதந்திர
 னுட்சேபன்னூத்திகன்னூர்கிளைஞரோ. (௪0)

ஆடணன்னதிகண்டகனிட்டுரன்
 றூர்க்கமன்றுக்கசிந்தகன்றூடண
பாடணன்பரபோகவிவர்ச்சகன்
 பஞ்சபாதகன்யார்படைவீரரோ. (௪௧)

நிலையிலாமதிமானவிவேகியா
 நிதம்பனிர்ப்ரியன்விக்ரகனிக்ரக

னலையருதசம்ப்ரமனூரம்பக
னவ்யவத்திதனூர்படையாவரே. (சஉ)

வேறு

உய்ந்துபோகவுபாயமுண்டேநுமக்
கைந்துபூதமுமென்படையல்லவோ. (சங)

வேறு

தேவர்வென்றிலர்புலன்களைந்தினையு
முனிவர்வென்றிலர்சிறந்துளோர்
மூவர்வென்றிலர்சகத்தில்வென்றவர்கள்
யாவரென்றினிமொழிந்திடே. (சச)

வேறு

என்படைப்பெருமைதானுமிறையோனுமுனிவோர்
யாருமங்கறிவரெண்ணமில்விவேகவரசன்
றன்படைப்பெருமையானறிகுவேனதறியான்
முன்வரச்சொலிறையைக்கொடுபொரச்சமரமே. (சரு)

தூதுமுற்றிற்று.
ஆ பாட்டு - ருஅக

---

மோகன்படையெழுச்சி.

அறிவிலாமதிவிவேகனோடவன்றலைவனுக்
கறியவோதெனவிடுத்தவனைமோகவரசன்
குறியிலாமதனராசனுடனெண்ணவருவெங்
கோபலோபர்படைகொண்டெழுகவென்றபொழுதே. (க)

வேறு

எமைவிடுமெமைவிடுமெனவுரைத்துவே
லெனவிருகணையெனவிழிசெலுத்தியே
சமைவர்களரிவையரொருகணத்திலே
சதுமறைமுனிவர்கடவமழிக்கவே. (உ)

ஒடிபடமுனிவர்தம்விரதமுற்றுரு
குலவுவரொருகையோடொருகைதட்டியே
வெடிபடுதிருநகைநிலவெறிக்கநீள்
விழிசுடரிருகுழைவெயிலெறிக்கவே. (௩)

அடியிடையினுமிகுமிகுதவத்தினோர்
அணிபுறவிணைமுலைமலைதொலைக்கவே
யடியிணைபணியுமிதழகுமக்கெனு
வணிபரிபுரவரியொலியழைக்குமே. (௪)

சடைசிலபுனையினென்மயிர்பறித்திது
தவமெனவுடைதவிரினென்மழிக்கினென்
னுடைசிலபுனையினெனுடைநெகிழ்த்துமுன்
னுலவியமகளிர்நம்முளனழிப்பரே. (௫)

புலவியனொருவியபுனிதர்புத்திகூர்
புலவியினழிவதைப்புரிதலுற்றுநீள்
கலவியின்விழவடுகரிமருப்புநேர்
கனதனவரிவையர்கலகமிக்கதே. (௬)

குருகெழுதடமலருகுமணற்குவால்
குயிலகவியபொழிலிசையிளைத்தகா
லுருகெழுமலரணைநிலவுமுற்றுமோ
ரொருபடைமுனிவரையுணர்வழிக்குமே. (௭)

வேறு.

கோங்கரும்புமுலைமடவார்சூழ்போக
வேண்மகரக்கொடிமுன்போகத்
தீங்கரும்புச்சிலைமலரும்படையெடுத்துத்
தென்றற்றேர்சென்றபின்னே. (௮)

இடிபோலுமிகற்றேர்மேலெழிற்படைகொண்
டெரியெங்குங்கொளுத்தித்தூமக்

கொடிபோகக்கொடுபழிபாவஞ்சூழ
　வெழக்கொடியகொடியகோபன். (௯)

வேறு

ஒழிவறுமுணர்வையுளத்துளே
　யுடையவர்தமையுமிமைப்பிலே
யொருவரொடொருவர்சலிக்கவே
　யுடலடுமமனாவிளிக்கவோ
வழிவறும்விரதமழிக்கவோ
　வருமறைநெறியையழிக்கவோ
வணைபவர்தமையுமொறுக்கவோ
　வதிபயமிகவும்விளைக்கவோ. (௧௦)

அகலிடமுடிப்விடிக்கவோ வசலமுமலையவலைக்கவோ
　வலைகடல்சுவறவெரிக்கவோ வமரர்களுலகமழிக்கவோ
விகலெனுமெரியினிழற்றியா திருபருதிகளுமொளிக்கவே
　யெரியினுமழலவிழிக்கவோ வெனவிருனிளைஞரிசைக்கவே.

வேறு

ஆசையின்பமேவிமீள்விலாதகாதலாகுதே
ரோசைகுன்றலோபனேகுமாண்மையாவரோதுவார். (௧௨)

புகைப்புகாவிடங்களும்புகுந்துதன்னையாவருந்
திகைக்குமாறுநிற்கவல்லதீரனிந்தவீரனே. (௧௩)

செய்தவங்கொடைகுலஞ்சிறந்தகல்விசெப்பில்போய்க்
கைதவங்கரப்பிரப்பவன்படைக்கலன்களே. (௧௪)

வேறு

மதமாச்சரியாதிமகாரதரோ
　ரொருவற்குளதாம்வலிசேர்படையின்

விதமார்க்கியலுஞ்சொலமேலெழின்மேல்
விண்ணென்றிலகிற்பதுமேதினியே. (கரு)

## மோகன்படையெழுச்சி முற்றிற்று.

ஆ பாட்டு - ருககசு.

---

### மோகனெழுச்சி வஞ்சி.

எள்ளின்றுணையும்புரையற்றுலக
மெங்கும்மிருண்மூடவெழும்படையின்
வெள்ளம்பகரும்படியோவினியவ்
விறன்மோகனெழுச்சிவிளம்புதுமே. (க)

ஒண்முத்தன்மலர்க்கழலிற்பணியா
வொருமுத்தனுவந்தமடந்தையர்தங்
கண்முத்தணியத்தடமார்பணியுங்
கதிர்முத்துவடங்கள்கவின்பெறவே. (உ)

காலிற்கழியாமுனநாள்பரமன்
காலிற்கழியாதுகழிந்துயிர்போங்
காலிற்கழுகுண்டுவிடப்படுதன்
காலிற்கவினக்கழல்கட்டினனே. (ங)

மன்னுந்தவமும்புகழும்மரபு
மாருவருளும்மணியாதழியும்
பொன்னுந்துகிரும்மணியும்பணியும்
பூணென்றுநினைந்துபுனைந்தனனே. (ச)

வேறு.

அத்தற்பதப்பொருளினற்பொற்பதத்தையறி
வற்றுப்பொரக்கடவனு
மத்தப்பிரமத்தனிமற்றுப்பொருப்பிலதென்
மத்தக்களிற்றின்வரவே. (ரு)

வேறு

வருபிறவிமாறவலகுரவனடிபேணுமிது
  வொழியமதிமாறுபடுவோ
னிருபுறமுமாரவருகழுகிறகுபோலவரு
  மிருகவரிவீசிவரவே. (சு)

வேறு.

மதித்தொருதனக்குளநலத்தினையுமற்றவர்வழுக்கினையுமே
கதித்திருபுறத்தினும்வெளுத்துள தனிக்குடைகவித்துவரவே.

அழக்கிளைஞரின்புறுமணப்பறைகணத்ததுபிணப்பறையுமா
முழக்கினையறிந்துமறியாவரசன்முற்பணைமுழக்கிவரவே. ()

கூற்றனமதக்கரிகொடிப்புயலணிந்துவருகுன்றனையதேர்
காற்றனகடும்பரிநெருப்பனவமைக்கடல்கடுப்பவரவே. (கூ)

வேறு

எச்சில்காணலாவடிசிலிட்டவாழிதான்மறைய
  விட்டநீறுமார்நிறையவிட்டபூணநூலினுடன்
மிச்சிருனுணுவிரதவிப்ரதீபனுமனென
  வித்தைசாலவேகுலவுவிப்ரர்கோடிசூழ்வரவே. (கo)

இட்டவேசிமார்கள்பேறும்வித்தையாசையாலகல
  வெக்யசாலைகோலியதிலட்சுமணராயராய்வடிவு
சிட்டவேடமாகமுடிதர்ப்பமாலையோடுவெகு
செற்பவாயராகிவருவிப்ரர்கோடிகோடிவரவே. (கக)

அப்ரகாசமாகவிடுமெக்குமாலையாபரண
  வச்சிமார்கள்பானமதிலப்ரபோகராயதிக
சுப்ரகாசநாமமோடுசுத்தமானஞானபரி
  துட்டர்போலவேவருவர்கட்டசோரவாமிகளே. (கஉ)

உட்கியாருமோடும்வகைகட்கசூலவேலசிண
  முற்றகோடுதாமிருகைபற்றியோடுவார்மனிதர்

கட்கிஞதகோலமோடுகட்குவாலுஞவதெதிர்
கக்குவாயராகிவருகட்டவேடதாரிகளே. (கங)

சித்தியாகுமாகுலசெக்கராடைமுடியுடல்
சித்தராகிமேவினவர்சித்ரநாரிமார்களோடு
புத்தியாகியேபுலவுபுத்திநாடிவீடுதோறும்
புக்கபூசைபோல்வருவர்புத்தகூடவேடர்களே (கச)

இட்டநீறுகாணிலெதிர்முட்டெஞவடாவகைசெய்
யட்சசாதஞமுகமதிட்டுவாதியாமுதிய
கட்டமானநாரியர்கள்பக்கலாசைகூரவதி
கட்டமாகநாறுமருகத்துராலர்சூழ்வரவே (கரு)

மோகனெழுச்சிவஞ்சி முற்றிற்று.
ஆ பாட்டு - சுகக.

---

ஏகன்படையெழுச்சி - காஞ்சி.

இப்பரிசுமோகவரசன்படை
யெழக்கடிதுசென்றிறைவர்தஞ்
செப்பரியசேவடிபணிந்திறைவர்
தாதனுரைசெய்தபொழுதே. (க)

வேறு

சிறிதுசிவந்திலதிருநயனங்களோர்
சிறுநகைகொண்டிறையோ
னறிதுமவன்படையெனவுலகுண்டருள்
பவளமலர்ந்ததுவே. (உ)

அதிரதமுங்கடகரிபரியும்பரி
கரமுமணிந்தெழுமே
யெதிரெதிர்முந்தியோரெதிரிலவன்படை
யெழுகவிரைந்தெனவே. (ங)

இறைவன்விடும்படையுடன்மனமைந்தனு
  மிவனொடெழும்படையு
முறையிடநின்றிலவளவறிகின்றில
  வுபநிடதங்களுமே. (ச)

வேறு

பாகென்மொழியவராகமுறவரிபாசமறவறவீசியே
காகமவருடலேறவிறுவகைநாதன்மதகரிகாணுமே. (ரு)

உலகினொருவருமுணரும்வகையறவுயர்வதறவுயர்வுடையவா
யிலகுமொருபதுதிசையுமிகலறவிடுமெவ்விறையவரிரதமே ()

வேகமிகுபகைவீரரிகலுறமீளவடியினில்வீழவே
மாகமுடியினும்வீரர்நினைவினில்வாளிவிடுமிறைவாசியே. (எ)

தாவுபலபரிவீரர்பொரவெதிர்சாரிலவர்தலைசாயவே
மேவியிமையுறுபோதினுடலுயிர்வேறுசெயவலவீரரோ. (அ)

இருமையையுமிறவெறியுமிறையடி
  யவர்கள்குணவணுவேசினுற்
பெருமைதிறல்பொறைவலிமையளிவெளி
  யொளிமண்வளிபுனல்பெறுவதே. (கூ)

வேறு

வினையைநீறெழவிழிப்பரோபிறிதில்வினையெலாமிற மிதிப்பரோ
நினையுமாறறவெதிர்ந்தவாருயிருநேரொனப்பருகிநிற்பரோ. [யு
பகலுமெல்லியும்வரம்பிலாவுலகனைத்தையுந்திசைகள் பத்தை
மகிலபூதமாயும்வாரியேயயிலவல்லரோ ரொருவர்தாமுமே.

அண்டகாரணமுமாவிகாரணமுமாதிகாரணமுமகிலமுங்
கண்டகாரணரடங்கவேயொடுமெறுப்பரோயொருகணத்தினே.

ஓரொருத்தருணர்விற்குளாக்களவிடப்படாதவுரு வுடையரோ
யாரொருத்தரிவரொப்பர்தம்முடைய நாயனொருவரன்றி
[யே. (கரு)

வேறு

கூற்றையோவிலக்குவதுகொடியவர்வெங்கூற்றினையே
காற்றையோசிறுத்துவதுங்கடியமனக்காற்றினையே. (கச)

சிலைகளையோவளைப்பதுதாம்வன்னெஞ்சர்சிரங்களையே
யலைகடலோதூர்ப்பதவரளவில்பவக்கடல்களையே. (கரு)

அல்லையோபகல்செய்வதறிவிலாருளத்தையே
கல்லையோகனிசெய்வதவர்கண்மனக்கல்லையே. (கசு)

கொல்விடமோநுகருவதுகொம்பனையார்தம்போக
வல்விடமேநுகர்ந்தாலுமயங்காமலிருப்பர்களே. (கஎ)

படநாகமோபூண்பார்பார்வைமுதலைம்பொறியாம்
விடநாகமைந்தினையும்பூண்டுவிளையாடுவரோ. (கஅ)

கொழுங்கனலோவவிக்குமதுகோபமெனுங்கொடுங்கனலே
வழங்குமதுமழிபொருளோமறைதேடும்வான்பொருளே. ()

அடலின்வருமவரொழியத்தாழ்விப்பதடியனையோ
முடலையுடலோவறுப்பததன்மூலவுயிரினையே. (உ0)

உரியநலவடியவர்கடம்பெருமைநம்முணர்விற்
றெரியுமெனயாஞ்சொலியசிறுமையேசிறுமை. (உக)

வேறு

அல்லதங்கவர்பெருமையையருமறையொழிய
வல்லதன்றரன்முகுந்தனும்பிரமனுமாட்டார். (உஉ)

இடையிலாரறிந்துரைப்பவர்தாமினியிவரை
யுடையநாயகன்பெருமையையோதுவாருளரோ. (உங)

வேறு

நம்பனல்லடியார்புடைசூழ்வரநாப்பணே
செம்பொன்மாமணிவைதிகத்தேர்மிசைச்செல்லவே. (உச)

என்னரந்தைகெடும்படிசெய்தருளெம்பிரான்
முன்னரந்தரதுந்துமியெங்குமுழங்கவே. (உரு)

கலைகடந்தமதிநிகர்வல்லகவிகையவ்
வலைகடந்தமதிநிறைவேநிகராவதே. (உசு)

இவணமென்றெழுதற்கரிதாமெழிலன்னமே
றுவணமுந்தொழுஞானநெடுங்கொடியோங்கவே. (உஎ)

காமனும்படையுங்கெடக்காணுநிரூபக
ஞமனும்படையுஞ்செலுமெங்கணுநாடியே. (உஅ)

பொறையுமின்சொன்முதல்வருதானையும்போகுமே
யறையும்வெஞ்சினமுப்படையுங்கட்டழியவே. (உகூ)

வேறு

தோஷாதரனுகியலோபனுடன்
றுயரப்படையுந்தொலையும்படிசந்
தோஷாதிகள்செல்லமதாதிகளுந்
தொலையப்படைசெல்வகைசொல்லுதுமே. (௩0)

அமதன்சுகன்மௌனியசிந்தகனப்
பிரதிகூலனதிட்டபரன்னியமன்
யமனின்மமனின்மலனித்தியபரன்
யஞ்ஞன்யதிபூதகிதாகரனே. (௩க)

பிட்சாசனன்வைதிகதன்மன்மகா
பெலனிந்தியநிக்ரகனுக்ரதபன்
னட்சாசனவேகனகொர்வியநா
யாசன்கிர்தகிர்த்யனநிந்தகனே. (௩உ)

தன்மன்சுகிர்தன்சுகிர்தஞ்ஞனசஞ்
சலன்வீரியனபிஞ்ஞனசம்ப்ரமனிட்

கன்மன்கவிசந்திகிர்பன்சுகுணக்
கிரகணன்பலகன்மவிவர்ச்சிதனே. (ஙங)

வேறு

அவாதியபயனசுல்பனுத்திகனவிக்ரகன்
சின்மயனித்தியவிரதன்
சிவாதிபரிபூசநாதனகிர்பணனு
ரதிசிலனதிதாகசமனே. (ஙச)

பாவகனபிஞ்சகனவிர்த்தன்கன
விசனவாசிகுருபத்மபதசச்
சேவகனநிட்டுரனவிர்த்தனவதானரதி
திரனதிநிச்சலனுமே. (ஙரு)

உத்தமன்சேவகனுதாரனலசாச
ணிசுதாரபரிக்ரகன்மகா
சத்தியபரனிற்பிருகன்மிதாசனனடம்பனவி
காரிகுணிசத்யதபனே. (ஙசா)

சுமந்திரனசலன்னகலகனநபிமானி
சுகதன்சுமனசன்சமன்
றமனமச்சரன்விசுத்தனநகன்
னமிர்தசங்கிரகணனே. (ஙஎ)

வேறு

அருபன்னித்தியனநித்தியநிருபணன்
சொருபன்சுத்தன்சுதந்த்ரன்சுவசனே. (ஙஅ)

வேறு

விபரீதபரன்னநசூயன்விவகாரபராமுகமித்ரன்
னபராதநிவர்த்திகனிர்த்தொந்த
னசோகன்பலசாதனனப்ரமனே. (ஙகூ)

வேறு

எந்தப்படையுளமோகற் கெழிலார்விவேகற்கோரொருவ
ரந்தப்படைடையத்துணித்தடுக்க வல்லாரிவ்வாறநேகரோ. ().

வேறு

பாதமுதலவனதாநிகழ்ந்தபரிபூரணபதந்தனிகளாம்
பூதமுமறைந்தறநிறைந்துபடைநின்றநிலையென்புகல்வதே
செடிதருமுடற்கொடும்மனித்தர்க
டிவத்தனமெனக்களிமிகுத்தனர்சிவன்
னடிதருநலத்தனமெனச்சுரர்களித்தனர்
நிலத்தவரடித்துகளினால். (சஉ)

ஏகன்படையெழுச்சி - காஞ்சி - முற்றிற்று.

ஆ விருத்தம் - சுடுரு.

---

தொந்தயுத்தம் - தும்பை.

சந்தியாதிமுனிரண்டுபடையுங்குதறுபா
ஷண்டர்சங்கமதிரச்சகலவேதமுட்னே
நிந்தியாமிருதியாகமபுராணவிதிகா
சாதிசங்கமொருகோடியெதிர்நின்றதிரவே. (க)

வாரமாகவொருமோகனரசாளவெனவே
வைத்தவந்தமனமன்னனையுமாயையுடனே
யாரமார்முலையவிஞ்சைமுதலாக்கினவரோ
யழியவும்படைவகுக்கும்விரகாரறிவரோ. (உ)

ஆயுமாறரியமாயைமுதலெண்ணவரிதா
மகிலசேனையுயிராயதமையங்கொழியவே
வீயுமாகினும்விவேகன்விடுசேனைபொருதாம்
வெற்றிகண்டுவிளையாடலைவிரும்பிமிகுமே. (ங)

மாளுமோகனைவிவேகனழியென்றுமனனு
மாயையுந்துணியவாளுமிருதாளுமுடையான்
வேளும்வேகனுமுலோபனுமுனனபடைபோய்
வீயவேசிருபகாதிபனையேவிவிடவே. (௪)

இலங்குமெய்ம்மைகொடியாகவுளதேரினயன
மென்னும்வாள்கொடுநிரூபகனடக்கவெதிரோ
கலங்கிரம்மடியில்வீழும்வசைசூழ்குவமெனக்
காமவேள்விடுகொடிப்படைகளித்துவரவே, (௫)

ஊனமுள்ளனவொழிப்பவர்களாகியுடன்மே
லுள்ளகுற்றமுறையாமலுறைசெய்வரதனுன்
ஞானமுள்ளவர்விளங்கவருநம்படையினின்
ஞரிமார்படைநமக்கெனநகாமொழியுமே. (௬)

வேறு

ஆற்றியவர்காட்டினுமதுதோன்றுமற்
போற்றியவர்பேணும்புல்லர்க்குச்சொல்லுவாம். (௭)

நீராட்டிவந்தவர்களன்றேநிரந்தரமா
வேராட்டிவந்தமணமெல்லாம்வெளியிட்டார். (௮)

காம்பட்டதோளியர்களன்றேவிக்காயத்தைப்
பூம்பட்டினன்மறைத்துப்பொல்லாங்கறிவிப்பார். (௯)

நாவியொழுகவருவார்நடைப்பிணமென்
றுவியொழுகுவதன்முன்னேயறிவிப்பார். (௧0)

காயிலைகத்தூரிகருப்பூரங்கொண்டன்றே
வாயின்மணத்தையறிவிப்பார்மாதரார். (௧௧)

புல்லித்துறக்கவறியாரைப்புல்லியவே
சொல்லித்துறப்பிப்பார்தூய்மொழியாரல்லரோ. (௧௨)

பந்தக்குரம்பைப்பழுதெல்லாம்பாரோர்கட்
கெந்தக்குரவரிவர்போலறிவிப்பார். (௧௩)

வேறு

இலகுமுத்துச்சுடுபுறத்துப் படுபலெற்புத்தொடர்களே
கலகமைக்கட்கணைகளப்பிற் குமிழியொத்துக்கழிபவே. (௧௪)

முருகுபுத்தப்புதுமலர்ப்பொற்புறமுடிக்கிற்கமழ்வதே
கருகுகற்றைக்குழலொழிக்கிற்பழையசிக்குக்கமழ்வதே. ()

அணியின்மிக்குத்திகழ்தனப்பொற் பதுங்கழ்த்திற்றசைகளே
துணியினத்தொக்கணுவினிற்சற்றதுபுழுத்துச்சொரிவதே. ()

உடைமறைக்கப்படுமழுக்கப்புடனெழுக்குத்துளைகளே
கடகளிற்றுச்சிரமென்மத்தக்கவிகள்கத்தக்கடவரோ. (௧௭)

அடிதொடக்கிச்சுரிகுழற்கொத்தளவுபுத்திக்கருவரா
விடமொரொட்குத்தளவுகிட்டிப்புகழுமற்றெத்தனையுமே. (௧௮)

புலவுகக்குப்புழுமலப்பைப்புறமறிக்கிற்புவியினோர்
கலவியுற்றுப்பெரிதுவக்கக்கடவர்சுற்றிக்கழுதலால். (௧௯)

துரிசுளைத்திப்பரிசின்மைக்கட்படையைமுட்டத்தொடரவே
தெரிசினப்பொற்றிகிரியுட்குற்றனர்கருப்புச்சிலையரோ. (௨௦)

வேறு

புணர்விற்கானகிலாமதிபுகுதக்காணுயர்மேனிலை
புனன்மிக்கார்தடமேவியபுளினப்பூதரநாண்மலர்
மணமிக்கார்குளிர்சோலைகண்மகிழப்பாடியவேழிசை
மலயக்காலிவையாவையும்வரவிட்டானிகன்மாரனே. (௨௧)

சீதத்தாலினிதேயழறீமிக்காலினிதேகுளிர்
தேனித்தார்வனவேபசிதீர்வுற்றுலிலதேசுவை
யோதத்தாமினிதாமெனவோர்வற்றேயவிவேகிக
ளோமத்தாமலமாமிவைகாமுற்றுமொனவோதியே. (௨௨)

வேறு

வேனிறுதன்வரவிட்டபடைவீயநலன்மெய்
விழியெனுந்திகிரியைக்கொடுநிருபகன்வெறுங்
கானனீரினிலெழுந்ததினழுங்குமிழிமின்
கனவினிற்கனவுபோலழிவுகண்டுவிடுமே. (உ௩)

விட்டவிட்டபடையாவையுமழிந்துவிடவேள்
வெறுங்கையோடுபொரமேனிகொடுசெல்லவிருதோண்
முட்டவிட்டெழினிருபகன்விளங்குமறிவா
முளரியங்கைகண்முருக்கினன்முடித்தலையையே. (உச)

வேறு

பாபவேண்முதலானபடைகொண்டுபொருபாதகக்
கோபராசனையரும்பொறையழிக்குமதுகூறுவாம் (உரு)

வேறு

இனத்தையறுத்தறுத்தெறியக்கறுத்தெறியிற்சிவத்தே
சினத்தவகத்தினைச்சிதையப்பணிக்கதிரிற்சிரித்தே. (உசா)

கதிக்குமொழிக்கனற்கடுகக்கெடக்குளிரக்கதித்தே
கொதித்தமனக்கனற்கினிமைப்புனற்குளிரக்கொடுத்தே. ()

அறுத்தழலிட்டருத்தில்வினைப்பலத்தைநினைத்தசித்தே
யொறுத்ததனைப்பொறுத்துநலத்தினைப்பெரிதுற்றெறுத்தே.

வேறு

கோபனைப்புறன்காணக்கொலைபழி
பாவமுற்றுந்துகளெழப்பட்டதே. (உகூ)

தாபந்தீர்தருசந்தோடன்கொலும்
லோபன்பட்டபரிசுமுரைத்துமே. (௩0)

வேறு

தொகுத்தநிதிபலகோடியுண்டெனினுந்தொல்லையிலே
வகுத்தவகையல்லாதுதுய்ப்பவரார்மண்ணிலே, (௩க)

ஒன்றிரண்டேயுடுப்பதுவுமுண்பதுவுநாழியே
யென்றுமொருவன்கிடையுமிருசாணுக்கெண்சாணே. (௩௨)

வேறு.

ஈட்டியிழைத்தல்வெங்கானமெங்குஞ்சென்றுமங்காமற்
கூட்டியிழக்குந்தேனீயைக்கண்டாற்பின்னுங்கூட்டுமோ. ()

ஆடம்பரதரவைபோலவாகும்படியுமதுபோலத் [டே.
தேடும்பொருள்கள்போம்படியுங்கண்டுந்தெளியார் சிலருண்

அனித்தனிருபணத்தின்மனோவிப்பிரமோவழிந்ததே
யினித்ததெனுநினைத்துமுனுதரித்ததெலாமிறந்ததே. (௩௫)

வேறு.

மானவகோடிதேடினரேனுமாநிதிகாணிகொண்டென்
போனவராரலாதொழுகப்புசித்தவரார்புவிக்கணே. (௩௬)

வேறு

அலங்கொண்டுலோபன்றனுசாபிசாசு
மிரப்புங்கரப்புமசத்தியாதியுஞ்சஞ்
சலங்கொண்டிழுக்கும்மொழுக்குந்தவாவச்
சந்தாபமுஞ்செற்றனன்பற்றறுத்தே. (௩௭)

உம்பன்புவிக்கன்றிவானுக்கும்யானே
யெனத்தன்மனத்தேநினைத்தங்கரிக்குந்
தம்பன்பெருங்கர்வமுந்தானுமாண்டான்
சதியாயுதங்கொண்டதம்பன்றிறத்தே. (௩௮)

வேறு

வேறிலாவகைவிருப்பொடுகலந்துநலனே
விளையவின்மொழிவிளம்பியுமுளந்தெளியவே
மாறிலாதசெயல்செய்துமொருகாலுமழியா
மச்சரன்றனையமச்சரன்வதைத்துவிடுமே. (௩௯)

மந்தரக்கிரியுநிற்குதலவேழுகடலும்
வற்றுமேழ்புவியுமாளுமுயர்வானவுலகு
மந்தரப்படுமெனும்படிதெளிந்துடலின்மே
லாதரன்றனையநாதரனழித்துவிடுமே. (௬௰)

நெஞ்சமொன்றுசொல்லொன்றுசெயலொன்றுடையதாம்
வஞ்சகன்றனையவஞ்சகன்வதைத்துவிடுமே. (௬௧)

ஈரமொன்றினிகழ்சாந்தியெதிரேறியவகங்
காரமும்படையுநேரொருகணப்பொழுதிலே. (௬௨)

வேறு

மொழிந்தவாசகத்தினன்றுநீங்குகாணுமுன்னமே
யெழுந்தவேகனுவியோர்விவேகனாலிறந்ததே. (௬௩)

மடக்குமாறிலாதவாதராசகோடிமாளுமே
யடக்கமானவீரன்வாளினற்றவாரவாரமே. (௬௪)

சுபாடிதன்குபாடிதன்சிரந்தனைத்துணிக்குமே
யபாடிதன்வெகுப்பிரலாபனுவிதன்னைவெளவுமே. (௬௫)

மாயையிச்சகத்துவத்துசித்துவீசனேயெனுந்
தூயசுப்ரபுத்தனப்ரபுத்தனைத்துணிக்குமே. (௬௬)

வேறு

சுகனசுகன்றனைத்துணிக்குமே
சுபனசுபன்றனைத்தொலைக்குமே
யகனுயிர்பொன்றமெய்ச்சீர்த்திவா
ளதினநகன்றுணித்தடுக்குமே. (௬௭)

உடலினகந்தைதத்தனைச்சதா
வுணருபவன்கெடுத்துவக்குமே
படருறுசிந்தையைச்சமத்தனோர்
பரமபதந்தனிற்படுத்துமே. (௬௮)

வேறு

கனலபவமறுகருத்துமேவாலசனலசனையழிக்குமே (சகூ)
பரமனதருளினைப்பரந்தபன்கரமெனவந்துயிர்கழிக்குமே.

வேறு

சுவசன்றுயர்கொண்டுசுழன்றுவரும்
விவசன்றுகளாம்வகைவென்றனனே. (ருக)

வேறு

வரதாரமகாவிர்தன்வாளியினிற்
பரதாரபரிக்ரகன்பட்டனனே. (ருஉ)

அதிமாசுருபந்தனையெற்றினனே
மதிமானுயிர்வெளவினன்மந்தனையே. (ருங)

வேறு

பவந்தந்தன்னிற்படுத்திப்பரந்தெழுந்
துவந்தன்றன்னைநிர்த்தொந்தன்றொலைக்குமே. (ருச)

இன்பஞ்செய்யுமிறைவனிணையடி
யன்பன்கையிலநாதரனழியுமே. (ருரு)

உசாவன்றிண்படையொண்டிறற்றீர்க்க
விசாரன்சாகசிகன்றனைவெல்லுமே. (ருசு)

சீறுமப்ரதிகூலன்சிதையவே
யாறுமப்ரதிகூலனழிக்குமே. (ருஎ)

குடும்பச்சிந்தையுங்கோலாகலங்களு
மிடும்பையுந்துறவின்கணிறந்தவே. (ருஅ)

பிராந்திசத்தியவாள்கையிற்பட்டதே
சாந்தியாலதிசம்ப்ரமன்பட்டனன். (ருகூ)

ஏகனூர்படையாலிப்படியினின்
மோகனூர்படைமுற்றுமுடிந்தவே. (சூ0)

தொந்தயுத்த முற்றிற்று.

ஆ விருத்தம் எசுங.

---

## மோகசமன்வாகை.

விடமன்னகாமன்முதலானசேனை
  விறலார்விவேகர்படையாற்
படமன்னமோகன்மிகவேவெகுண்டு
  படைகொண்டெழுந்துசெலவே. (க)

இகன்மோகன்முன்னரிருண்மீதெழுந்த
  ரவிபோல்விவேகனெழவே
பகலோனெதிர்ந்தபனிபோலிறந்து
  படுமோகன்விட்டபடையே. (உ)

ஒருகோடியம்புவிடமோகன்மீள
  வொருசண்டவாயுவுடனே
சருகோடுமென்னவெழிலார்விவேகர்
  தனியம்புதள்ளிவிடுமே. (ங)

வேறு

மாளமாளவிவேகனெய்யமனத்தின்மந்திரவலியினன்
மீளமீளவெழுந்துமோகன்விடாதபூசல்விளைக்கவே. (ச)

வீயுமோகினைவேரறுமல்விடஞ்செய்மோகன்விவேகனால்
மாயுமோவுயிர்மாயையாருமனத்தினுருமிருக்கவே. (ரு)

ஏகனாகியவீசனந்தமனப்பசாசறவெய்யிலே
மோகனாருயிர்மாயுமென்றனன் முன்னைநான்மறைமுடிவதே.

மோகனாருயிர்மாள்வதெந்தைமனப்பசாசைமுடிக்கிலென்
றேகநாதர்துணைப்பதத்தில்விவேகராசனியம்பவே. (எ)

வேறு

புலகதிகள்யாவையுமரிக்கவே புகலிடமிலாமனநடுக்குறு
வுலகுபதினாலுமொரிமைப்பிலாவொழியுமறியாமையினொளி
[த்ததே. (அ)

மனமுமறியாமையுமரிக்கவே
மதியெனுளிவாள்கொடுதுணிக்கவே
முனமுதவுதாயெனுமவிச்சைதான்
முடுகுமதிவாண்முகமுழுத்தியே. (௯)

பரவுணர்வுவாளினைவிதிர்க்கமா
பருதியெனவேயொளியெறிக்கவே
யிரவுவடிவாகியவவிச்சைதா
னிகலழியவாருயிரொளித்ததே. (௧0)

அகலிடமியாவுமதனைக்கொடே
யடையவறியாவனுபவத்தினுற்
புகலவருமாயையையறுக்கவே
புரணபரிபூரணமெறித்ததே. (௧௧)

மரணபவவீடுயிர்பரத்தொடே
மன்னனிருசேனையுமனைத்துமோர்
கரணமதுவாதலின்மிகுத்ததே
கருணைநிதியாருளமகிழ்ச்சியே. (௧௨)

வேறு

இப்படியொன்றுமில்லாவகையெலாமிறந்தபின்னு
மப்படியொன்றுமில்லானமைந்திலனமரினுசை. (௧௩)

பின்னரும்வானமாதிப்பெரும்படையெழுப்பஞானப்
பன்னரும்படையில்யாதும்படும்படிபரமன்பார்த்தே. (௧௪)

வேறு

வரவியோமவொலிகோடிசெவியோடுமெடியப்
பரவியோமவிசைஞானவொலிபண்ணியதுவே. (௧௫)

வாதவூறுபலதொக்குவரமன்னுபரமன்
பாதவூறுணவுபற்றியிறவெற்றியிடுமே. (௧௬)

ஊனநாட்டமொளிவந்தனவனந்தவுருவ
ஞானநாட்டவொளிவந்துறநசித்துவிடுமே. (௧எ)

மங்குநாவிறனிறந்தவிரதங்கள்வரவே
யெங்குஞானரதவின்பமிடையின்றியெழவே. (௧அ)

நாசிநின்றபுவிசேர்மணநடக்கநலமே
வீசிநின்றவறிவான்மணம்விழுங்கிவிழுமே. (௧கூ)

ஆக்கையற்றபொருளென்றகமதித்தமதியைத்
தாக்கையற்றபொருடன்னின்மதிதள்ளிவிடுமே. (௨0)

ஐயமேயமைவதானமனனங்கழியவே
வையமேயமைவதானமனனங்கழியுமே (௨௧)

யாதுமாயறிவிறந்தபொருளொன்றுமிலதே
யாதுமாயறிவிறந்தவொளியொன்றுமுளதே. (௨௨)

ஊனமாகியவகம்பிரமமாகியதுபோய்
ஞானமாகியவகம்பிரமமாகியதுவே. (௨௩)

வேறு

ஞானநாடகங்கண்டுளமகிழ்ந்தனனுதன்
வானநாடரும்வணங்கினர்வந்தடிமகிழ்ந்தே. (௨௪)

கேதமாலையயும்புதல்வருங்கிளையுடன்மடிந்தார்
போதமாகியசேனையும்பரன்பதம்புகுந்தே. (௨௫)

ஈசனிங்ஙனமழிக்கவெண்டிசைகளுங்கீழ்மேற்
பேசநின்றிடுமகிலலோகங்களும்பிணமே. (௨௬)

மோகசமன்வாகை முற்றிற்று.

ஆ விருத்தம் எ௩௧

## களங்காட்டு.

ஏதுதானியம்புவதெனவிறைவியுண்மகிழ்ந்து
போதுநாமெனவிரைவொடும்படுகளம்புகுந்தே. (௧)

வேறு

துய்யமாசில்சோதியாகுமேகனைச்சொலப்படும்
வையமாவிபீசனுக்குமாயைமாய்தல்பார்மினோ. (௨)

ஆவியாக்கியெல்லையற்றசனனமாக்குமப்பெரும்
பாவியாமம்மாயைமாதுபட்டபாடுபார்மினோ. (௩)

வேறு

அயர்ந்துமொருமோகனையளித்தவனைமுன்னம்
பயந்தவறியாமைபொடிபட்டபடிபாரீர். (௪)

மங்குமிடனின்றியொருமாத்திரையினுள்ளே.
எங்குமுலவும்மனனிறந்தபடிபாரீர். (௫)

ஆகவடிவாகியுலகாண்டவறிவில்லா
மோகவரசிங்ஙனமுடிந்தபடிபாரீர். (௬)

வேறு

தூமங்கலந்தகுழன்மடவார் குழக்கிடப்பத்தூயவெழிற்
காமன்கிடந்தகிடைபாரீர் காகம்பிணங்குமியல்பாரீர். (௭)

கரும்பார்கன்னலெனமொழியுங்கனிவாய்பட்டபடிபாரீர்
சுரும்பார்குமிழேயெனப்புகழுந்துண்டம்பட்டபடிபாரீர். ()

ஆரக்களபச்சேருடியறிவோர்தமையுந்திறலழிக்கும்
பாரக்கலசப்பயோதரங்கள்பட்டுக்கிடந்தபடிபாரீர். (௯)

வேறு

தவளத்தினித்திலமோதண்புறவின்
முல்லைமுனகதானோசெய்ய

பவளத்திற்பொதிந்ததெனும்பல்லென்பாய்
முடிந்தபடிபார்மின்பார்மின். (௧0)

பிணையென்னமலரொன்னபெரியதபோதன
ருளனும்பேதஞ்செய்யுங்
கணையென்னகற்றவருந்துதிக்குமிந்தக்கண்பட்டுக்
கிடந்தபடிகாண்மின்காண்மின் (௧௧)

வேறு

பரிபுரபதங்களவைபாரீர் பரிமளமணஞ்செய்குழல்பாரீர்
நரிபொருதுகொண்டபடிபாரீர் நலன்மருவுமன்பர்பதிபாரீர்.

வேறு

கலைசூழறிஞர்தஞ்செவியுங்
கண்ணுஞ்செவிடுங்குருடுமாய்க்
கொலைசூழ்வகைசெய்திடுங்கொடிய
கோபன்கிடந்தகிடைபாரீர். (௧௩)

வேறு

ஆகமுமாவியும்பொருளுமளித்துநாதர்க்
கவனருளாலானந்தநாடாளாதே
காகமுநாய்களுஞமனும்பிறவுமுண்ணக்
கைவிட்டுக்கிடந்தநிலைகாண்மின்காண்மின். (௧௪)

முன்புமிகப்பொருள்பலருந்தேடித்தேடி
முந்தையுடன்கொடுபோகாதிறக்கக்கண்டும்
பின்புமிகப்பொருட்டேடுமெவாவன்செத்துப்
பிணத்தினும்வாயங்காந்தபெருமைபாரீர். (௧௫)

வேறு

அடித்தலைவணங்கநரபால
ரமைச்சரோடிருந்தநிருபாசன்
முடித்தலைகிடந்தபடிபாரீர்
முனைச்செயன்முடிந்தபடிபாரீர். (௧௬)

உனவ்ருமகந்தையபிமான
முளவிருண்மனம்பொய்களவாதி
யனைவருமுவந்தகிளையோடு
மடையவுமிறந்தபடிபாரீர். (௧எ)

களங்காட்டுமுற்றிற்று.
ஆ விருத்தம். எ௫௬

---

கூழடுதல்.

என்றுதனிநாயகரிகற்களமியம்பிக்
குன்றுதலிலாவினியகூழடவுரைத்தே. (௧)

ஆங்கினிதிருந்தனளணங்கடுமடைக்குப்
பாங்கினியபேய்மகளிர்பற்பலர்திரண்டே. (௨)

வேறு

அகமாறீபுறமுகமாறீயறி வறிவாளேபிறிதறியாதாய்
மகமாறீசுகவடிவாய்கூழட வாரீர்கூழடவாரீரோ. (௩)

ஈதிதெனநிகழ்வெல்லாமறிவுரு வல்லாவிலதெனுநல்லேக
வாதியறிவுருநீதிகூழட வாரீர்கூழடவாரீரோ. (௪)

அறவீதியவைமறவீயினியவை சொல்லீதுனியறுசொல்லீநல்
லறவீநலன்மிகுமுறவீகூழட வாரீர்கூழடவாரீரோ. (௫)

வேதிவினையொடுகோதி யழகியமேதாய்விண்முதல்யாதிற்கு
மாதியணிமிகுசோதீகூழட வாரீர்கூழடவாரீரோ. (௬)

திருவீஞானநல்லுருவியழிவறு சித்திபகிர்வறுபத்திசின்
மருவியுலகியலொருவீகூழட வாரீர்கூழடவாரீரோ. (௭)

வேறு

உயர்ந்தவாரணக்கொம்பேயுலக்கையா
யோங்குபோதகக்காலுரலாக்கியே

பயந்தமாயையின்மக்களின்பறகளைப்
பரமனுரருள்பாடியிடித்துமே (அ)

கூழடுதென் முற்றிற்று.
ஆ விருத்தம் எ௬௪.

---

சம்முலக்கை.

உகைக்குமனத்தாருடையவுரனெல்லாங்குரவனடி-
துகைக்குமளவானதுகாண்சம்மேலோசம்முலக்காய். (௧)

ஊன்றுவும்புறக்கரணமுட்கரணமொடுங்கிடவே
தோன்றுமைதோன்றியதேசம்மேலோசம்முலக்காய். (௨)

சான்றுமென்றறிந்திலேயோசகலமுமாய்விடத்தோன்றுந்
தோன்றுமைதோன்றியக்காற்சம்மேலோசம்முலக்காய். ()

சான்றுகுமறிவொழியச்சாக்கியமாஞ்சகத்தென்றுந்
தோன்றுதுகண்டாயேசம்மேலோசம்முலக்காய். (௪)

விரியுமிடத்துலகறியும்புரியுமிடத்துணர்வறியுந்
துரியமதிற்றுரிசளகாண்சம்மேலோசம்முலக்காய். (௫)

ஆங்குணராலமயுமுணர்வுமாகியகோளறவிருந்து
அங்கினர்காண்சகமடைவார்சம்மேலோசம்முலக்காய். (௬)

தெரியாதென்பதுந்தெரிந்தவிடத்தல்லாற்றெரியாத
துரியாதீதம்மிதுகாண்சம்மேலோசம்முலக்காய். (௭)

துரியாதீதந்தன்னிற்புரிந்தானுந்தொல்பிறவித்
துரிசானதொழியாகாண்சம்மேலோசம்முலக்காய். (௮)

துஞ்சுதல்கண்டாயதிதம்பிறப்பதுகண்டாய்துரியந்
துஞ்சல்பிறப்பொழித்தல்காண்சம்மேலோசம்முலக்காய். ()

தொல்லையிறையாகமஞ்சொற்றுரியாதிதஞ்சுருதி
சொல்லுகின்றபரவுடல்காண்சும்மேலோசும்முலக்காய். ()

கேட்டிதென்றறியாதவதீதத்தைக்கேடின்றிச்
சூட்டினதுபரவுடல்காண்சும்மேலோசும்முலக்காய். (௧௧)

நீங்குதலில்லாவறிவேநிகழ்ந்தக்கால்விழிப்பதுவுந்
தூங்குதலுமுண்டாமோசும்மேலோசும்முலக்காய். (௧௨)

சத்தமாதிகளுமெலாந்தற்சொருபமானபரி
சுத்தமாய்விட்டதுகாண்சும்மேலோசும்முலக்காய். (௧௩)

கருதவொண்ணுவெண்ணிறந்தகாட்சியெல்லாங்கண்ணுன
சொருபமய்நிகழ்ந்ததுகாண்சும்மேலோசும்முலக்காய். (௧௪)

தோன்றியவிவ்வுலகமெலாஞ்சொருபமாய்நிகழ்ந்ததெனத்
தோன்றியதுந்தன்கண்ணேசும்மேலோசும்முலக்காய். (௧௫)

எல்லாவண்ணமுமின்றியிருந்தபடியேயிருக்கச்
சொல்லாமற்சொல்லியவாசும்மேலோசும்முலக்காய். (௧௬)

எல்லாமாயல்லாதவிறையியல்பையின்னதென்று
சொல்லாடவிரகுண்டோசும்மேலோசும்முலக்காய் (௧௭)

புலமறுபாழ்வருஞ்சீவன்போதப்பாழ்வருமீசன்
சொலவருபாழ்வருஞ்சொருபன்சும்மேலோசும்முலக்காய்.()

வையமுயிர்பரமாக்குமாயைப்பாழ்மூன்றுமறத்
துய்யசுடர்தானேயாஞ்சும்மேலோசும்முலக்காய். (௧௯)

இடரின்பஞ்செயுமாயையிருளின்பவறிவாகுஞ்
சுடரின்கண்டோன்றுமதேசும்மேலோசும்முலக்காய். (௨0)

சொருபன்விழிமலரச்சும்மாதிருந்துவிடச்
சொருபபரிபூரணமாஞ்சும்மேலோசும்முலக்காய். (௨௧)

வாயுணர்வுமாண்டிடத்தேவாயிலாமட்குடத்திற்
ரேயமெனநிறைந்ததுகாண்சும்மேலோசும்முலக்காய். (உஉ)

ஊமைமொழிகொடுபிரமமோதவுணர்வுற்றபடி
தூய்மறையின்முடிவுரைக்குஞ்சும்மேலோசும்முலக்காய். ()

தற்பதத்தின்றன்னிலமைதானறியவோதுதலாற்
சொற்பதத்தில்வாராகாண்சும்மேலோசும்முலக்காய். (உச)

உற்பலத்தினழகுமணமுருப்போலவொன்றின்கண்
சொற்படுசத்தியமாதிசும்மேலோசும்முலக்காய். (உரு)

அல்லேயுங்குழன்மாயையவள்பயந்தவகிலம்வெறுஞ்
சொல்லேயாய்விட்டதுகாண்சும்மேலோசும்முலக்காய். ()

அலைந்துவருமுளவிகற்பமழிந்துவிடப்பிறவியெலாந்
தொலைந்தபடிகண்டாயேசும்மேலோசும்முலக்காய். (உஎ)

இன்னதெனமறைமுடிக்குமியலாதவிப்பரிசைச்
சொன்னபடிகண்டாயோசும்மேலோசும்முலக்காய். (உஅ)

சொல்லாதமறைமுடிவைச்சொல்லாமற்சொன்னதனைச்
சொல்லாடவிரகுண்டோசும்மேலோசும்முலக்காய். (உகூ)

சாத்திரமென்செயநமக்குத்தர்க்கமயலறுத்தபிரான்
ரேத்திரமேவேண்டுவதுசும்மேலோசும்முலக்காய். (௩O)

சும்முலக்கை முற்றிற்று.

ஆ விருத்தம் எகூச.

---

கூழ்சமைப்பு.

ஏகனதடியிணையிங்ஙனேத்தியே
மோகர்தம்பல்லெலாமுறியக்குத்தியே. (க)

புண்ணியனடியிணைபோற்றிபோற்றியே
திண்ணியபோதகச்செவியிற்றெள்ளியே. (உ)

வேறு

பாதமாமலர்கணல்கும் பரமனைப்பாடிப்பாடிப்
போதமாவிடித்திராகிற் போனகமாக்கவாரீர். (ங)

செம்பொனுன்மகுடஞ்சூடித் தேசிகனுகவந்த
வம்பொனுரடிகள்சூடா முடிகளையடுப்புவையீர். (ச)

வாழ்வுமாடென்றுமங்கி வள்ளலார்கழலின்வந்து
தாழ்வுருவறிவிலாளர் தலைகளைத்தடாக்களாக்கீர். (ரு)

சொற்பதங்கடந்தவின்பச் சொருபனுர்துணிந்துவிட்ட
வுற்பவவுதிசோரி யடையவுமுலையுட்பெய்யீர். (சு)

தொந்தவன்பாசத்தாலே சுற்றிவன்சுமையாய்வந்த
பந்தவிந்தனத்தான்ஞானப் பாவகன்றன்னைமூட்டீர். (எ)

தீதண்டம்பெருகமோகஞ் செய்யுமக்காமராசன்
கோதண்டமிரண்டாய்வெட்டிக் கூழடத்துடுப்புக்கோடீர். ()

இராப்பகற்பசித்துப்பட்ட விடரினைநினைத்துநெஞ்சிற்
பராக்கினையொழித்துநல்ல பதத்திலேயிறக்கவாரீர். (கூ)

வேறு

என்றநந்தகடத்திணுக்கியவின்னமு
தொன்றினென்றுவிளாந்தெடுக்கவுவப்பொடே. (க0)

தொடைத்துநாரந்தெளித்துத் தொழுதுமுழுதையும்
படைத்தமாதின்பரிக்கலம் பார்த்துப்படைக்கவே. (கக)

எமதுயாமெனவெண்ணினராவியெலாமெடுத்
தமுதுசெய்திருகைவிளக்கினளன்னையே. (கஉ)

பஞ்சபாசமிலையெனக்காயெனப்பண்ணியே
பஞ்சபாசமடைக்காயமுதுபடைப்பரோ. (௧௩)

பத்தராவிபருகுதிருப்பவளத்திலே
வைத்தவாரமுதத்தினின்மிச்சில்வழங்கவே. (௧௪)

வருகவென்றுகணங்களைவள்ளல்களெள்ளுரு
ருருகுநெஞ்சோடழைப்பர்கடம்முடனுண்ணவே. (௧௫)

கூழ்சமைப்புமுற்றிற்று.
ஆ பாட்டு - அ0௧.

---

கூழ்வார்ப்பு.

இலகும்போதக்கண்விழித்தங் கெல்லாம்போதமெனக்காணு
மலகும்போதமாயையென வோதும்பேய்கள்வாரீரோ. (௧)

காணுஞ்சித்துத்தான்பரமன் காட்டுஞ்சித்தென்றுள்ளபடி
பேணுமுண்மைப்பொருட்பேதம் பேசும்பேய்கள்வாரீரோ. ௨

வேதாவிரோதமறவொன்றும் வீட்டிற்பலவாநாடிலெனப்
பேதாபேதநிலைநிற்கப பேசும்பேய்கள்வாரீரோ. (௩)

கருதும்பொருளெல்லாமழியுங் கருத்தற்றதுவேவீடென்று
சுருதிசொன்னபொருட்சொல்லுஞ் சுகதப்பேய்கள்வாரீரோ.

எல்லாவுலகங்களுமுடிந்த விடத்தேமுத்தியெல்லாமா
யல்லாதென்றப்பொருள்சொல்லு மருகப்பேய்கள்வாரீரோ.()

பொன்றுமுடல்போவதுமுத்தி யின்பப்பொருளேபொருளல்
தொன்றுமில்லையென்றோது முலகாயுதப்பேய்வாரீரோ. [லா

பர்னத்தந்தக்கரணத்தின் பதைப்பையறுக்கவெனக்கேட்டுப்
யானத்தந்தப்பதைப்பறுக்கப் பார்க்கும்பேய்கள்வாரீரோ.(எ)

அறவேதனைப்பட்டருந்துவது தேடித்திரியாதாரமுதம்
பெறவேவிம்மியலமாக்கும் பேய்களெல்லாம்வாரீரோ. (அ)

துன்புற்றுழலவமையுமெனிற் றூரத்திரிமினூரமுதுண்
டின்புற்றிருக்கவேண்டுதிரோ லெல்லாப்பேயும்வாரீரோ. (கூ)

வேறு

பொல்லாதவுடலமெலாம்பூரணமாகும்பரிசுபோதகத்தால்
வல்லாளன்வென்றகளக் கூழுண்ணும்வகையடங்கவாரீரோ.()

நினைத்துமறந்திச்சகத்தை யெல்லாநேரோயொறுத்துப்பாரா
மனத்தையறுத்துமறு மாற்றந்தின்றுகொள்ளவாரீரோ.[ண்ட

போக்கும்வரவுமறுத்தகழல் போற்றிப்போதக்கூழுண்டு
வாக்குமனனுமிறந்திடத்தே வாளாவிருக்கவாரீரோ. (கஉ)

ஆக்கையறுத்துக்கரணங்க ளறுத்துச்சீவபரமறுத்து
வாக்கையறுத்தானந்தக்கூ ழுண்ணவாரீர்வாரீரோ. (கங)

வேறு

விடாயெல்லாமென்றுபொன்னடிசூட்டியே
வேதகஞ்செய்தருள்வீரனைவாழ்த்தியே
விடாயெல்லாங்கெடவுண்ணவரும்படி
மீளுமுள்ளக்கலத்தைவிளக்கியே. (கச)

இல்லறந்துறவென்றிலேவேண்டினூர்
யாவரோனும்வருகென்றிடுவதே
நல்லறமெனயாவர்க்குநல்கினூர்
நாதர்வெல்களக்கூழுண்ணநல்கியே. (கரு)

வேறு.

அலகைகள்கூழிற்கலம்வரலாற்று ரமுதத்தைப்பெற்
றுலகுயிரீசற்பகிர்வறவெல்லாமுடனுண்டே. (கசு)

மெத்தித்தாகங்கெடநுகர்மெய்ஞ்ஞானனந்தந்
இத்தித்தாகமயிர்க்காரூறுந்தேக்கிட்டே. (கஎ)

திருகறப்போதப்பேய்பேசியேயோதிருஞானம்
பருகப்போகப்படுவதுபண்டைத்தரமுண்டோ. (கஅ)

வேறு

துஞ்சலின்றியுணர்வின்றிமயலின்றியயலுந்
தொடர்வுமின்றியிடரின்பமுதலின்றியெவையு
மெஞ்சலின்றியிதுவென்னுமியல்பின்றியுளதா
மியாவையும்பிரமமாகியதிருந்தபடியென். (கக)

கூழ்வார்ப்புமுற்றிற்று.

ஆ பாட்டு - அஉஅ.

---

தோத்திரம்.

அலைமிசையானுமயன்முதலாமண்
டருந்தேடற்கரியவரும்பதந்
தலைமிசையானமைபாடீரோ தன்கருணைத்திறன்பாடீரோ. (க)

ஒருநயமின்றியானுழைக்குமுற்பவ
நோய்கெடப்பார்த்தருளுந்
திருநயனங்களைப்பாடீரோ செய்யகருணையைப்பாடீரோ. (உ)

ஒழிவற்றசோதியுணர்வுதன்னை
யுளங்கைக்கனியெனக்கண்டுகொள
வழியிட்டவீரனைப்பாடீரோ வார்த்தையொன்றுலென்றுபாடீரோ.

மரணபவங்கண்மடிந்திடவேவடிவுபுனைந்துவரும்பெருமான்
சரணநிகழ்ந்தமைபாடீரோ சந்ததமப்பதம்பாடீரோ. (ச)

உன்னவரிதென்றுபநிடங்களோதும்பொருளையொருமொழி
சொன்னவிரகனைப்பாடீரோ சொருபாநந்தனைப்பாடீரோ. [யிற்

பவமாயம்வேரறப்பார்த்திறைவன்
பதத்திலும்பண்டைநாமொழிந்து
சிவமாயிருந்தவைமபாடீரோ சிவப்பிரகாசனைப்பாடீரோ. (௬)

புத்திக்குமெட்டரிதாயபொருள்
புவனியில்வந்தைம்புலன்களினுந்
தித்திக்குமாறினைப்பாடீரோ தேசிகராசனைப்பாடீரோ. (௭)

ஊனநடங்கண்டுமுன்னநம்மை
யோருருவாய்வந்துணர்த்திக்கண்ட
ஞானநடந்தனைப்பாடீரோ நடராசன்றனைப்பாடீரோ. (௮)

தோத்திர முற்றிற்று.

ஆ பாட்டு - அ௰௬.

---

மங்கலவாழ்த்து.

புரியும்விழிதந்தகழல்வாழியே
புறமகமிருந்தபொருள்வாழியே
துரியமுமிறந்தசுடர்வாழியே
சொலவறவிருந்தசுகம்வாழியே. (௧)

வேறு

பேதமபேதமறுத்தவன்வாழியே
பேதமைதீரவளர்த்தவன்வாழியே.
போதமபோதமறுத்தவன்வாழியே
பூரணபோதசமுத்திரம்வாழியே. (௨)

துறந்தவர்கைப்பட்டிருந்தவன்வாழியே
தொடர்ந்துபிடித்துப்புரந்தவன்வாழியே
மிறந்தவுளத்திற்றிகழ்ந்தவன்வாழியே
யிரங்கியெனக்குத்தருங்கழல்வாழியே. (௩)

மறந்துநினைக்கப்படாதவன்வாழியே
மயங்குமனத்தார்க்கிலாதவன்வாழியே
பிறந்துமரிக்கப்படாதவன்வாழியே
பெருங்கருணைக்கற்பகாடவிவாழியே. (௪)

வேறு

உருவருவோடுளதிலதுமொழில்பரன்வாழியே
யுளபொருளையுணரிலவையுதறுமவன்வாழியே
கருவழியையழியவருகரசரணன்வாழியே
கழலும்விழிகருணையுடனருள்சொருபன்வாழியே. (௫)

அழகுபெறுமௌனபதமருளுமவன்வாழியே
யடியருளமுருகவருமருளமுதன்வாழியே
பழகிவருபவதுயரையழிசெய்பரன்வாழியே
பரகருணைவடிவினிகழ்பரமகுருவாழியே. (௬)

அறிவுதனிலுருகுமறிவருளுமவன்வாழியே
யகமிதமுமறுவிழியினமருமவன்வாழியே
பிறிவதறுபுலனுருகவருளுமவன்வாழியே
பெருவிழியினுருவழிசெய்பெருநிலையன்வாழியே. (எ)

வேறு

அன்னையெனக்கயலாக்கினன்வாழியே
யல்லலறுத்தெனைநோக்கினன்வாழியே
யென்னையெனக்குறவாக்கினன்வாழியே
யின்னமுதத்துருவாக்கினன்வாழியே. (அ)

வேறு

தொழுமவராவிவாங்கியவங்கணன்வாழியே
சுகமகமானசாந்திநெஞ்சினன்வாழியே
யெழுபவநாசமாஞ்சொல்லொன்றினன்வாழியே
யிமையவர்மூவர்தாந்தொழும்பிரான்வாழியே (௯)

கருதியகோலமாந்திருமேனியான்வாழியே
கதிரவர்சோதிதாம்பெறுஞ்சோதியான்வாழியே
சுருதிகடேடுவான்பொருளாயினுன்வாழியே
சுகமகமாகியாம்பெறுஞ்சோதியான்வாழியே. (௧0)

வேறு

தொழுகுலம்விளங்கவிமையோரொன்றும்வாடநீள்
சுருதிகளநந்தமுகமாய்நின்றுதேடமூ
வெழுகுலம்விளங்கவடியேனின்றுகூடவே
யிணையடிவழங்குசொருபானந்தன்வாழியே (௧௧)

வேறு

மூவர்தேவர்வாழியென்றுமுடிவணங்குமிருகழற்
றேவதேவன்வாழியேசிவப்பிரகாசன்வாழியே. (௧௨)

வேறு

அலவமென்றங்கலையிறுதற்கப்பசாசமோசகன்வாழியே[யே
யதுநீயென்றங்கருமறையுச்சத்திறைது மோர்பொருள்வாழி
சொலவரவென்றுந்தொடர்வருசச்சிச் சுகாதிகாரணன்வாழி
[யே
சொரூபானந்தன்கலைபுனைதத்துவப்பிரகாச மாமுனிவாழியே

மங்கலவாழ்த்துமுற்றிற்று.

ஆ பாட்டு - அசுகூ.

பதினேழாவது

## மோகவதைப்பரணி

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மகாவாக்கியதசகாரியம்.

முதலாவது. வாக்கியோற்பத்தி.
உ - வது. வாக்கியபேதம்.
ங - வது. வாக்கியமுக்கியம்.
ச - வது. வாக்கியப்பிரகாசம்.
ரு - வது. வாக்கியவஞ்ஞானநிவர்த்தி.
சா - வது. வாக்கியநிருணயம்.
எ - வது. வாக்கியத்தியாகம்.
அ - வது. வாக்கியவவதி.
கூ - வது. வாக்கியக்கதை.
க0 - வது. வாக்கியார்த்தம்.

## இப்பத்தும் வருமாறு.

### க-வது வாக்கியோற்பத்தியாவது.

நாலுவாக்கியமும் நாலுவேதத்தில் உற்பத்தி. *

### உ-வது வாக்கியபேதமாவது.

பிரஞைபிரமம் - என்று முந்தினவாக்கியத்தை உபதேசித்தார்.

பிரஞையாவது எது என்றுகேட்ட சிடனுக்கு அகம் என்று இருக்கின்றது எதுவோ அதுவே என்று இரண்டாம்வாக்கியத்தை உபதேசித்தார்.

---

* பிரஞைஞானம் பிரமம் என்பது இருக்குவேதம்.
அகம் பிரமம் அசி என்பது யசுர்வேதம்.
தத்துவம் அசி என்பது சாமவேதம்.
அயம் ஆன்மா பிரமம் என்பது அதர்வணவேதம்.

அகம் என்பது அநேகம் அவற்றில் எந்த அகம் என்று கேட்டசிடனுக்குச் சீவ ஈசுரர்களுக்கும் அப்பாற்பட்ட பிரமம் என்று மூன்றும்வாக்கியத்தை உபதேசித்தார்.

சீவ ஈசுரர்களும் தள்ளப்பட்டபோதே துவிதமாயிற்றே என்று கேட்டசிடனுககு அந்நியமாகிய சீவ ஈசுரர்களும் பிரமத்தைத்தவிர இல்லை என்று நான்காம்வாக்கியத்தை உபதேசித்தார்.

ந - வது வாக்கிய முக்கியமாவது.

சகல உபாதிகளையுந் தள்ளிப் பிரமமே தானாய் ஆகாமியம்பற்றாதபடியால் முதல்வாக்கியம் - முக்கியம்.

வேடதாரிபோலச் சகலகிருத்தியமும் தானல்லவா மாகின்ற பிரமமே தானென் றுக்கிவைத்தபடியால் - இரண்டாம் வாக்கியம் முக்கியம்.

சீவ ஈசுவரப்பிராந்தியைத்தள்ளி அப்பாற்பட்ட பிரமமே தா னென்றுக்கிவைத்தபடியால் மூன்றும்வாக்கியம் முக்கியம்.

சஞ்சிதத்தைப்போக்கிச் சகலமுந் தானென்றுக்கிவைத்தபடியால் நான்காம்வாக்கியம் முக்கியம்.

ச-வது வாக்கியப்பிரகாசமாவது.

முதல்வாக்கியப்பிரகாசம் சத்து.

இரண்டாம்வாக்கியப்பிரகாசம் சித்து.

மூன்றும்வாக்கியம்பிரகாசம் ஆநந்தம்.

நான்காம்வாக்கியப்பிரகாசம் பூரணம்.

ரு-வது வாக்கியவஞ்ஞானநிவர்த்தி.

முதல்வாக்கியத்தால் ஆவரண நிவர்த்தி.

இரண்டாம்வாக்கியத்தால் விட்சேப நிவர்த்தி.

மூன்றும்வாக்கியத்தால் மாயை நிவர்த்தி.

நான்காம்வாக்கியத்தால் அவித்தை நிவர்த்தி.

### ௬-வது வாக்கியநிருணயமாவது.

அகண்டமுந் தானாக்கிவைத்தபடியால் - நான்காவதே முக்கியம்.

மற்றைய மூன்றுவாக்கியமும் அலவருந்ததி ஞாயம்போல நேதிபண்ணித் தள்ளின துவிதத்தைப் போக்காதபடியால் அமுக்கியம்.

### ௭-வது வாக்கியத்தியாநமாவது.

முதல்வாக்கியத்திற்குத் தட்சணாமூர்த்தி.
இரண்டாம்வாக்கியத்திற்குச் சாட்சி.
மூன்றாம்வாக்கியத்திற்குக் குரு.
நான்காம்வாக்கியத்திற்குப் பரிபூரணம்.

### ௮-வது வாக்கியவவதியாவது.

முதல்வாக்கியத்திற்குச் சாட்சாத்காரம்.
இரண்டாம்வாக்கியத்திற்கு எனதுயான் என்பது.
மூன்றாம்வாக்கியத்திற்குச் சிவ ஈசுவரப்பிராந்தி.
நான்காம்வாக்கியத்திற்கு அகண்டசாட்சாத்காரம்.

### ௯-வது வாக்கியக்கதையாவது.

முதல்வாக்கியத்திற்குக் குச்சிலியச்சக்கிலியன்கதை.
இரண்டாம்வாக்கியத்திற்கு இராட்சதன்கதை.
மூன்றாம்வாக்கியத்திற்கு வேடுவச்சிகதை.
நாலாம்வாக்கியத்திற்குப் பிராமணன்கதை.

### ௧0-வது வாக்கியார்த்தமாவது.

முதல்வாக்கியம் பிரஞை ஞானம் பிரமம் என்று மூன்று பதமாயிருக்கும். அவற்றுள் பிரஞை என்றது அறிவு. அந்த அறிவு பூதமெனின் அது சடமானபடியால் அறிவாக மாட்டாது.

சரீரமெனின் அது தன்னையும் பிறரையும் அறியமாட்டாதபடியால் ஆகாது. இந்திரியமெனின், அது அந்தக்கரண

யின்றி யறியாதாகையால் ஆகமாட்டாது. அந்தக்கரணமெ னின், அது நினைப்புமறப்புமாயிருக்கையால் அறிவாகமாட் டாது. அவித்தையெனின் அது அஞ்ஞானமாகையால் ஆகா து. சீவனும் எனின் அவன் கிஞ்சிஞ்ஞனுகையால் ஆகான். பின்னையெதுவெனின், சாட்சியானது சீவன் முதலாய்முன் சொல்லப்பட்டதையெல்லாம் அறிகின்றபடியாலும் அந்தச் சாட்சியையறிய வேறொரு அறிவில்லாதபடியாலும் அது நித்தியப்பிரகாச மானபடியினுலும் அச்சீவசாட்சியையே அறிவென்பது. அவ்வறிவே ஞானமென்பது அதுவே பிரம மென்பது என உபதேசித்தார் என அறிக.

இரண்டாம்வாக்கியம் அகம் பிரமம் அசி, என மூன்று பதமாயிருக்கும், அகம் என்பது. தானென்பது தனதா னியமேதானெனின், அவை புத்திராதிகட்குப் பீடைவந்த வேளையில் பிள்ளைமுதலியவை பிழைத்தாற்போதும் என்று அவைகளைக் கைவிடுகையினுலே அவை ஆகா. பிள்ளையே எனின், அதுவும் வேகின்றவீட்டில் பிள்ளைபோனுற்போகின் றது சரீரம் பிழைத்தாற் போதுமென்றோடுகிறபடியால் அது ஆகாது. சரீரமே எனின், அதுவும் தூளிக்காற்றடிக்கிற போது சரீரத்தைக்கைவிட்டு இந்திரியங்களைப் பதனம்பண் ணுகையால் அதுதானல்ல. இந்திரியங்களேயெனின், இதுவும் தியானவேளையில் கைவிடப்படுகிறபடியால் ஆகாது-மனமே எனின், சுழுத்தியவத்தையில் கைவிடப்படுகிறபடியால் ஆகா து. அஞ்ஞானமே எனின், அதனுல் பொல்லாதகாரியங்களை ச்செய்து இலச்சைவந்தவிடத்தில் நல்லறிவு பிரகாசிக்குமா கையால் அது தானுகாது. அந்நல்லறிவாகிய சீவவறிவே தானெனின், மரணவேளையில் இவ்வேதனைப்படுகிறதிலும் என்சீவன் போகாதோ என்று சீவனைத்தானல்லவென்று கை விட்டுப் பரமப்பிரிய சுகமானசாட்சியே தானுகவேண்டுமெ

ன்று நாடுகையால் அகமாகியசாட்சியேதான். இந்த அகமாகியசாட்சியே பிரமமென்றது. அசி என்றது இந்தப்பிரமமே தானுயிருவென்றது.

மூன்ரும்வாக்கியம் தத் துவம் அசி என மூன்றுபதமாயிருக்கும். தத்பதமாவது ஈசுர உபாதி, துவம்பதமாவது சீவ உபாதி, அசிபதமாவது இரண்டிற்கும் ஐக்கியம் தத்பதவாச்சியமாவது - விராட்டு இரணிகர்ப்பம், மாயை இந்தச் சரீரத்திரயவபிமானி. சீவ ஈசுரர். தத்பதலட்சியம். பிரமம். துவம்பதவாச்சியமாவது, தூலசூக்கும காரணசரீரம் இந்தச்சரீரத்திரயவபிமானி சீவன். இலட்சியம் கூடஸ்தர்.

ஐக்கியம் எப்படியெனின், கடாகாசமும் மகாகாசமும் ஒன்றென்றறிகின்றதுபோல கூடஸ்தரும் பிரமமும் ஒன்றென்றறிகிறதே ஐக்கியம்.

நான்காம்வாக்கியத்திற்கர்த்தம் அயம் ஆன்மா பிரமம் என மூன்றுபதமாயிருக்கும் இவற்றுள் அயம் என்பது பூதம் ஆன்மா என்பது பௌதிகம், இவ்விருவகையும் முன்சொன்ன சீவேசுவரவாச்சியம். பிரமம் என்றது இந்த வாச்சியமான உபாதியே பிரமமென்றது, அஃதெங்ஙனம் பிரமமாமெனின், யானைதானே மரமானாற்போலவும் பாம்புதானே பழுதையானாற்போலவும் வெள்ளிதானே கிளிஞ்சிலானாற்போலவும் கள்ளனேகட்டையானாற்போலவும் கானற்சலமேயளருனாற்போலவும் பூத பௌதிகமே பிரமமென்றது.

ஆகவாக்கியநான்கும் அர்த்தஞ்
சொல்லப்பட்டன.

**மகாவாக்கியதசகாரியம்**
முற்றுப்பெற்றது.
திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

தத்துவராயசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# அமிர்தசாரம்.

இஃது

குழுத்தளை

மகா - ள - ள - ஸ்ரீ

வேதாந்தபாஸ்கரராய்விளங்கிய

மகா - ள - ள - ஸ்ரீ

சிவக்கொழுந்துமுதலியாரவர்கள்

குமாரராகிய

சிவசிதம்பரமுதலியாரவர்கள்

வேண்டுகோளின்படி

திரிசிரபுரம்

வித்வான்

மதுரைநாயகம்பிள்ளையவர்களால்

பிழையறப்பரிசோதித்து

ஊ. புஷ்பரதச்செட்டியாரவர்களது

கலாரத்நாகரம் என்னும் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

பிரபவஞூ ஆவணிமீ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பதினெட்டாவது

# அமிர்தசாரம்.

வெண்பா.

கலைக்கட்டளை.

## கடவுள்வணக்கம்.

ஞானக்கண் ணுளர்க்கு ஞானனந் தச்சுடரா
யூனக்கண் ணுளர்க் குலகமாய் - வானந்
தனக்குப் பெறவரிய தற்சொருபன் பொற்று
ளெனக்குப் பெறவெளிதே யின்று. (க)

அருளிறைவணக்கம்.

அறியாமை யாந்திமிரத் தந்தனுய்வீட்டி
னெறிகாண வின்றி நிலையற் - றிறுவேற்கு
ஞானுஞ் சனத்தாலே நாட்டந் தனைத்தந்த
கோனுந் தொழக்கடவ கோ. (உ)

வேதச்சிறப்பு.

இதினுள்ள தெல்லாக் கலைகளினு முள்ள
திதினில்லா தியாவையினு மில்லை - யதினுலே
யாது மறிய விரும்பினுன் யாதுமுள
வேத மறிவான் விரைந்து. (ங)

## ஆகமச்சிறப்பு.

கற்பவர்க ளெப்பொருளுங் காண்பவர்க்குக் கண்ணகு
முற்பவநோய்க் கெல்லா மொருகடுவாம் - தற்பொருடான்
யாதா வுணர்ந்தா ரவர்க்கதுவா மெக்கலையு
மோதா துணர்ந்தா னுரை. (௪)

## அறிஞருரைச்சிறப்பு.

எந்தக் குலமாயென் னெந்தக் கவியாயென்
னெந்தச் சமயத் தெவராயென் - சிந்தைத்
துறவி தருஞ்சொல்லே தூய்தாவ தல்லாற்
பிறவிதருஞ் சொல்லே பிற. (௫)

## நூற்பெயர்.

வேதா கமமோதி மெய்ம்மை விளங்குதற்குப்
போதா தெவர்க்கும் புருடாயு - வோத
வுறுமமிர்த சாகரத்தே யுள்ள மதனுற்
பெறுமமிர்த சாரமெனும் பேர். (௬)

## அவையடக்கம்.

வேத மொழிப்பொருளை விண்ணவர்கண் மூவருமுன்
போதவுணரா வுலகறிய - வோதுகேன்
வானின்ற வல்லிருளை மாற்றுநின் றேனெழிப்பன்
யானென்ற மின்மினியே யான். (௭)

## நன்னெறியுரைத்தல்.

இம்மை மறுமை நிலையன் றெனவிடுக
செம்மை நெறிநடக்க சித்தந் - தமைமீட்க
தம்மையுணர்ந்தோர் தலைப்படுக தத்துவத்தின்
மெய்ம்மை யறிக விரைந்து. (௮)

## அருமையுணர்த்தல்.

பெறவரிது மக்கட் பிறவிபெற் ருலு
மறிவுநூ லாய்த லரிதே யதினுந்
துறவுடைய ராத லரிதே யதின்மெய்
யறிவுடைய ராத லரிது. (௯)

## ஞானிலக்ஷணம்.

அறிவுள்ள தல்லதில தென் றறிவான்ஞானி
யறிவான் முழுது மறிவா - னறிவ
னறிவறி யானம யறவிருந்த வண்ணல்
மறையோதும் வான்பொரு டான். (௧௦)

## ஞானிசீலம்.

அருந்தல் பொருந்த லவையொக்கு மேனும்
பெருந்தகையோ ருள்ளம் பிறிதே - திருந்து
மனத்தின்வே றேபதியு மைந்தனுமம் மாதின்
றனத்தின்வே றல்லவே தான். (௧௧)

## ஞானிசரிதை.

தீதென நன்றெனச் சிந்திப்ப ரோதெளிந்தோர்க்
கோதன மன்ருே வுலகெலாம் - பாதவத்திற்
றீதாத னன்ருதல் சிந்தித் திடச்சாத
வேதாவிற் குண்டோ விதி. (௧௨)

## ஞானிபெருமை.

விண்ணே பெரிது மிகவீசன் கைவழியா
மண்ணே யதுபெற்ற மாமாயை - யெண்ணிற்
சிவனிற் பெரியாரிற் சிந்தையிலார் வைத்தா
ரவனிற்பெரியா ரவர். (௧௩)

ஞானியேவற்சிறப்பு.

எங்கே வெளிப்படுக வென்று னெழின்ஞானி
யங்கே வெளிப்படுதற் காதரித்தே - யெங்கும்
பரமனவ னேவல்செயப் பார்த்திருக்கும் யார்தான்
றரமவ னேவ றனக்கு. (கச)

ஞானிபூசைச்சிறப்பு.

அவனுண்ட தண்டமெலா முண்டதயனுஞ்
சிவனுந் திருமாலு முண்டான் - சிவமென்றும்
பூரண ஞானியைப் பூசித்தான் பூசித்தான்
காரணனைக் கண்ணாரக் கண்டு. (கரு)

ஞானியையிகழ்ந்தவர்கேடு.

எழின்ஞா னியையிகழ்வார் கேட்டா ரிகழ்கேட்
டழலா ரனுமதித்தார் நால்வர் - கழலுதன்
மேதக வென்றவரை விட்டக லாதார்பஞ்ச
பாதக ரென்னப் படும். (கசா)

கூடாவொழுக்கம்.

யோகத்தி னுண்மை யுணர்வின்றி யூண்பொருட்டா
லேகத்தி னின்றே மெனவியம்பி - மோக
மனத்தவல மாற்றுத வல்வேடர் தம்மை
நினைத்தவருங் காணார் நெறி. (கள)

கனனவிதி.

நன்ஞான ஞானி மரியா ளொருநாளு
முன்ஞான மோக விருண்முருக்கித் - தன்னுருவைக்
கண்டபொழு தேகழியுஞ் சூக்கவுடல் கன்மபல
முண்டுபோந் தூல வுடல். (கஅ)

தத்துவ ஞானி திருமேனி தாங்கினு
ருத்தம லோகத்தி னும்பரா - முத்தன்
திருக்கோயில் கொண்டவிடந் தேவா லயமென்
றிருக்கோது கின்ற விடம். (ககூ)

## உலககாரணம்.

அணுவென்பர் மாமாயை யென்பரணுவின்
புணர்வென்பர் பூதமே யென்பர் - குணனென்ப
ரெவ்வே துவுமோ துகவிதற்கே தேதுவென்னு
வவ்வேது வேயேது வாம். (உ0)

## காரணகாரிய வேறின்மை.

மன்னு முதற்பொருளின் மன்னுத விவ்வுலகம்
பின்ன மெனுமாறு பேசற்க - பொன்னே
யணியா வதன்முன்னு மப்பொனே காய்ச்சி
மணியான போது மறித்து. (உக)

## படைப்பு.

ஞானனந் தச்சுடராய் நன்றாகி யொன்றான
தானாகியபடத்திற் ருன்றன்று - னுவா
யார்த்த கடலுலக மாமோ வியமெழுதிப்
பார்த்து மகிழ்ந்தான் பரன். (உஉ)

நானிலநீர் பைமுட்டை நால்வகை யோனிசுரர்
மானிடர்நீர் வாழ்பறவை மாகிருமி - ஞானமிலா
மண்பட்ட தாபரமென் றேழாய் வரும்பவநூ
றெண்பத்தி னன்கா யிரம். (உங)

ஊர்வ பதினென்று மொன்பானு மானுடவர்
நீர்பறவை நாற்காலி நேர்பத்தாஞ் - சீர்திகழு

மூவாருந் தாபரங்கண் முப்பத்து மும்மையோ
ராவா ரொருபதா ரும். (உச)

அணுப்பிரவேசம்.

ஆன கடங்க ளளவிலவற் றுட்புகுந்து
வானகந் தானின்ற வாறொக்கும் - யோனிகளெண்
பத்துநான் காயிர நூ றுகப் படைத்தவற்று
ணித்தனுர் நின்ற நிலை. (உரு)

அழிப்பு.

ஆன வுடம்பனைத்து மைம்பூதத் தேயழியும்
வானுதி பூதமிறு மாயையினி - ஞனு
வொழிந்தமா மாயவிரு ளுள்ளொளியா யும்ப
ரெழுந்த ஞானத்தா லிறும். (உசா)

பவகாரணம்.

செறிபொருள தாகித் திகழ்பளிங்கு போல
வறிபொருள தானவறி வன்றன் றன்னை
யறியப் பிறவி யறலாற் பிறவிக்
கறியாமை யாகு மடி. (உஎ)

உடலுற்பத்தி.

ஆதபன்வா னுகுதியா நல்குமதி ஞேடதியா
மோதனமுண் டாயிருநீ ருண்டாகு - மாதுடனுண்
டன்னுருவா மிக்கநீர்க் கண்டஞ்ச மங்கவிழ்தல்
வன்னிபுழு வுண்டேன் மலடு. (உஅ)

பிண்டகோசம்.

சுவர்செய்து மண்டசையாச் சோரிநீ ராக
விவரங்கள் காலியங்க விட்டுக் - கவர்கால்க

ணட்டுக்கை வைத்து நரம்பிட் டுரம்பெறவே
கட்டித்தோல் வேய்ந்தவகங் காண். (உகூ)

பிண்ட வுருவிற் பிறத்தலாற் கெர்ப்பத்திற்
பிண்டவுருவா யிருத்தலா ஞனும்
பிண்டமிட வேண்டுதலா லவ்வுடற் பிண்டம்
பிண்ட மெனப்பேர் பெறும். (௩0)

அண்டகோசம்.

நிலனேழு சூழவரு நீரேழு கீழ்பா
தலனேழு வானேழு தம்பக் - குலகிரிக
ளெட்டுநடு மேருகிரி யேமகட கஞ்சூழப்
பட்டுளதோ ரண்டப் பரிசு. (௩க)

அண்டபிண்டவேற்றுமை.

வெளியசைவு வெம்மை நெகிழ்வுரமாம் விண்கா
லொளிபுனன்மண் கண்ணுதய னுள்ளங் - குளிர்மதியங்
கொண்டெய்த் தவனறிவு சோசமாம் பிண்டத்து
மண்டத்து முண்டோ வயல். ௩உ)

வீடுபற்று.

நெடுந்தூரமண்மை நினைவுபோ மாறுங்
கடும்பரி கால்வைத்து வாங்கல்-படங்களைந்தோர்
புட்டகம் வேறே புனைத லிவைபோலும்
விட்டுட லங்கொள்ளும் வினை. (௩௩)

உற்பத்தி யாந்தாதை வாயு வுடன்கூடிப்
பொற்புற்ற கொங்கையர்தம் போகத்தே - கெர்ப்பத்தைக்
கொண்டேதை செல்லுமெனக் கூறுவீர் கூறீர்கண்
மண்டேகஞ் சென்ற வழி. (௩௪)

## உடலிழிவு.

மணனென் றியமாந்தர் வாயுப்போங் காட்டிற்
பிணனென்று பேரிட்டுப் பொத்தக் - கணன்வந்து
புட்குத்து மிவ்வுடலிற் பொல்லாங் கொழிந்திருப்ப
தெட்குத்து முண்டோ விடம். (௩௫)

## குடும்பவிழிவு.

திடன்படு சீலந் திகழ்கல்வி கேள்வி
யிடம்படு மேதைசீ ரெல்லாம் பசுமட்
குடம்படு நீர்போற் குடும்பியைக் கைவிட்
டுடம்போடு கூட வுகும். (௩௬)

## போகவிழிவு.

சிந்தா குலமனிதர் சீசீ செவிமுதலா
மைந்தானு மீடழிவ ரல்லரோ - வைந்திலொரு
வேட்கை யசுண மிபம்விட்டின் மீன்வண்டு
கேட்கைமுத லோரொன்றிற் கேடு. (௩௭)

## மகளிரிழிவு.

எரிகொண்டு மல்ல வெறிபடைகொண் டல்ல
வருநஞ்சுங் கூற்றுங் கொண்டல்ல - கருநெஞ்சத்
தம்மாதர் தம்மைப் படைத்த தணியிழையார்
தம்மாலே யாகத் தகும். (௩௮)

## பொருளிழிவு.

இன்னலா மீட்டுங்கா லீட்டினு லியாவனாயு
மொன்ன லராக்கு முயிரிறுக்கு - மன்னு
மனத்தைவே ருய்மயக்கு மானடுக்கஞ் செய்யுந்
தனத்தின்வே றுண்டோ தவறு. (௩௯)

அரசிழிவு.

முரசு வழங்குதம் முற்றத்திற் றெற்றி
யரசு வணங்குங் கழலா - ரொருசுணங்கன்
கவ்விய காலிற் கடைகடோ றுஞ்சுழல்வர்
வெவ்விய சொல்ல வெறுத்து. (௪0)

சுவர்க்கவிழிவு.

பொதுமாதர் தோளே புணர்வ தமிர்த
மதுபான முண்டே மகிழ்வ - தெதுகோடி
சாவார் பிறப்பார் சதுமுகனோர் நாளினிது
தேவா திபரெய்துஞ் சீர். (௪௧)

நிலையாமை.

உலகி னிலைநிற்ப தொன்றில்லை யென்றே
தலைவர்கண் மூவருஞ் சாற்றினா ரஃதே
மலைவுறு மார்க்கர் மதமு மதனு
னிலையின்மை யொன்று நிலை. (௪௨)

துக்கத்தொகுதி.

கருக்குழவி கௌமாரங் காளைப் பருவம்
விருத்த மழைவெய்யில் வீசும் பனிக்கால்
கருத்தி லுறக்க முணர்ச்சியெக் காலத்
தொருத்தனின் பத்தை யுறும். (௪௩)

துறவு.

மடம்படு மிப்பிறவி மாற்றநினைவார்க்
குடம்பு மிகையென் றுணர்வுற் - றடங்கத்
துறவா மனிதற் கெளிதன்றே துஞ்சிப்
பிறவா நெறியைப் பெற. (௪௪)

## புத்தன்.

ககனமு மான்மாவுங் காரணனு மில்லை
சகலமு மாமநித்தஞ் சார்வார் பிறவி
வகைவினை யுண்டு மதிபொன்ற மாய்தல்
சுகதன்றன் முத்தித் துணிவு. (சரு)

கரணமே யான்மாக் கணபங்கி நித்தப்
புரணமோ வீசன்வான் பொய்யே - மரணமே
வீடென்ற ஞத்திகரின் வேறுவிப் புத்தனெனு
மூடன்றான் சொன்ன மொழி. (சசா)

## சமணர்.

அருவுரு வுண்டில்லை யொன்று பலவாம்
பொருளியல்ப தானளவே போத - மருகர்க்
குருவினை விட்டா லுலகும்பர் வீடு
குறியதற் கெட்டுக் குணம். (சஎ)

வெளியிற் பறந்துபோய் வீடெங்குப் பெற்றாய்
குளிர்வெம்மை கண்டாயோ கூட - வுளதில்லை
யொன்று பலவென்று மூனளவென் றாயுணர்வை
யென்றுமதி கண்டா ரியார். (சஅ)

## உலோகாயதம்.

இறந்தார் பிறவா திலதுவா னீச
னறம்பாவ மாயிழையார் கூடல் - சிறந்த
நலனூர் சுவர்க்க நரகம் பிரிதி
லுலகா யிதன்ற னுணர்வு. (சகூ)

சடவுடற் நன்மைசாக் காடு நரகங்
கடவுள் வலிகாட்டுங் கண்ணுங் கரும

முடியாமை காட்டு முனைவினையை மாத
ரடைவதே காட்டு மளாறு. (௫0)

மீமாஞ்சன்.

நரகுசுவர்க் கந்திங்கு நன்றுங் கருமந்
தருமிறை தானன்றி யில்லை - பிரமமொலி
நாடுங் குணன்புத்தி ஞானமில்பா டாணம்போல்
வீடென்றான் மீமாஞ் சகன். (௫க)

சித்துச் சடமாகை யோமுத்தி செய்வினைகள்
சுத்தச் சடமீய வற்றோ சுகதுக்கம்
புத்தி குணமாயிற் பொன்றுமோ வான்குணமாஞ்
சத்தம் பிரமமோ தான். (௫உ)

நியாயம்.

அணங்குற்ற வான்மாவநேகம் வியாபி
குணம்புத்தி யாமுத்தி கூறிற் - பிணம்போல்கை
மெய்யா மிறைவனையும் வீடுகெட்டுக் கேதுவா
னையா யிகநூ னலம். (௫௩)

செயாது வினைச்சடமாய்ச் சென்மத்தைச் செய்யிற்
றயாவிலனு மவ்வீசன் றானும் - வியாபி
குணமாகிற் புத்திக்குக் கூடா தொடுக்கம்
பிணமாகை யோவீடு பேறு. (௫௪)

வைசேடிகம்.

முத்தியினிர்க்குணனாய் முன்னங் குணங்குணியாய்ப்
பத்தியினன் முத்தியிறும் பாவனையாற் - சுத்தச்
சடர்ப்பல ராயவத்தை சார்தலான் மாக்கள்
கடனென்றான் வைசேடி கன். (௫௫)

ஆவ சடலங்க ளான்மாவே யாமனம்போ
லோவு மவத்தையுறு முன்னுணர்விற் - பாவனையாற்
கூடுமோ வீடு குணம்போய்க் குணியுண்டோ
சூடுபோய்த் தீயுண்டோ சொல். (௫௬)

சாங்கியம்.

பகுதிபுமான் மெய்ப்பகுதிப் பாலே விகுதி
சகலந் தனதென்கை பந்தமாம் - விகுதியாம்
யாதும் பகுதி யுடையதெனக் கில்லையெனும்
வேதனஞ் சாங்கியன்றன் வீடு. (௫௭)

முன்னரே யுண்டேற் பகுதியதான் முத்தியிலை
பின்னுஞ் சடமாம் பகுதி பெறக்கூடா
தன்னாலேவீ டெய்து மாகினீ சற்குருவைக்
கொன்னேவிரும்பியதென் கூறு. (௫௮)

சைவம்.

மடவன் பசுபதி வாலறிவன் பாசஞ்
சடமா மியல்பு சமமா - முடன்வியாபம்
பண்டுளவை மூன்றும் பசுபாசம் போயிறையைக்
கண்டுறைதல் சைவன் கதி. (௫௯)

ஈசனது தோற்றமே தெல்லாம் வியாபித்தாற்
பாசமி லாதான் பதியென்னிற் - பாசமெனில்
விண்டிடா தாம்பதியால் மெய்கரணம் வேறுண்டாங்
கண்டிடா நின்ற கதிக்கு. (௬௦)

சம்மேளிதசைவம்.

பாசமாம் பந்தம் பசுப்பெத்த முத்தனு
மீசனநாதி யிவர் ஞானம் - பூசையா

மம்மோக மாற்றி யவரொன்றல் வீடென்முன்
சம்மே ளிதச்சைவன் முன். (சுக)

பெத்த மாதி கெடுமான பின்கெடுமே
முத்தியும் பாசந்தான் முன்னுள தேற்கெடுமே
சத்தி யெனில்வெம்மை போனுற் றழலுண்டோ
வுத்தி யிலதிரண் டொன்முகா தொன்றுகெடின்
முத்தி கெடலோ மொழி. (சுஉ)

பாசுபதம்.

அகில மிறைமுன் பணுத்திரள் செய்யுஞ்
சகலான் மாக்க டீளயா மலங்க
ளுகமலம் பூசையா லொப்பாகை முத்தி
பகர்கின்முன் பாசு பதன். (சுங)

சகம தணுவாஞ் சடஞ்செய்யு மாறென்
புகலணுவும் பூதமே யன்ரு - வகமில்
கிரியையாம் பூசை கெழுமலங்கள் போக்கி
விரியு மிருளா விருள். (சுச)

வாமம்.

தண்ணிய சுட்கச் சமயிக ளெவ்வுருவும்.
பெண்ணுருவிற் காணும் பிறப்பதெலா - முண்ணறவே
புத்தியு முத்திப் பொருளுந் தரும்பிணமே
சத்தி யிலாதவெலாந் தான். (சுரு)

மேதினி யொன்றை விளக்குமோ வித்தின்றி
மாது தருகுவ மையற் பிறப்பன்ரு
போத மழிபுலீர் புத்திக்கு முத்திக்குஞ்
சாதன மானதோ சாற்று. (சுசு

### பைரவம்.

ஏகமாம் பைரவமெண் டத்துவமா யெண்கலையா
யாகிய ஞாலந்த ஞர்ச்சனையாற் - போகமா
முத்தரிக்கு நால்வரா ஞல்வரா யோகத்து
வித்தரிக்கு முண்ணளியால் வீடு. (சுஎ)

ஏகத்து வங்கெடுமே யெட்டானுன் மற்றவையிய
யாகிற் கலைசொல்லா தாயழியும் - போகமுனக்
குள்ளதோ வன்றே தருவாருகு கருத்தோ
கள்ளதோ நல்குங் கதி. (சுஅ)

### காளாமுகமாவிரதம்.

வேணியென் பக்கு முதறரித்து மெய்விரதந்
தானு வுனைப்படியிற் றப்பாமற் - பேணிப்
புனைதங்கா தானசிவ லோகம் புகன்மா
விரதங்கா ளாமுகன்றன்வீடு. (சுகூ)

தவவேடங் கொண்டவுட ருளழிந்தாற் போமே
யுவையோங்கின் நீடேற்று முன்னைச் - சிவலோக
மெங்குமெனக் காணுதே யோரிடத்தே யேறினுர்
சங்கையில் வீழ்வதற்குந் தான். (எ௦)

### சிவாத்துவிதம்.

அணுதி சிவஞ்சகத்து மாருயிரு மாகத்
தனுதருவைத் தானே பகுத்துத் - தனுலொழியப்
பேறிழ வில்லை பெறுவானு மீவானும்
வேறில தென்றறிகை வீடு. (எக)

தானே சகத்தாய்ப் பகரினது தான்சடமாந்
தானே பிறப்பாக்கிற் றுனெழிக்கிற் - றுனேதன்

கண்ணைக் கலக்கிக் கடவுளா முற்சிவம்போய்
வெண்ணைக்கமுமோ விளம்பு. (எ௨)

வைஷணவம்.

நாரா யணுசிதிரு நாமந் தரித்தலா
லாரா தனையா லடிமையெனப் - பேராழி
கோயிற் பொறியால் வைகுந்தப் பதந்தந்தை
தாயிற் றருஞ் சீதரன். (எ௩)

மண்ணு விடுநாமம் வாளெரியா லிட்டகுறி
புண்ணு முடம்பொழிந்தாற் போகாதோ - விண்ணுடில்
வைகுந்த மேவுதிரு மாலுருவங் காணவொரு
மெய்கொண் டிருக்குமதோ வீடு, (எ௪)

மாயாவாதம்.

அவிகார மேபிரம மாயையினு லாகி
யிவிகார மெல்லா மிறக்கும் - பவமான
வூனதும்பொய் ஞான முதித்ததும் பொயஞ்ஞானம்
போனதும்பொய் மற்றுமெலாம் பொய். (எரு)

அவிகாரத் தன்மை யவிகாரங்காணி
லவிகாரந் தானல்ல வாகு - மவிகார
மாயை யறியி லவிகாரமாயையாய்
வீயும தாரறிவார் வேறு. (எசு)

சௌரவாதம்.

தோற்ற நிலையிறுதி செய்தலாற் றெல்லுலகி
லேற்றவிரு ளெல்லா மிரித்தலாற் - போற்றவருஞ்
சங்கரன்மா ஞன்முகனுய்த் தற்பரனுய் நிற்கின்றுன்
வெங்கதிரோ னல்லதிலை வேறு. (எஎ)

ஈசன்முனிய வெயிறு விழவிழுந்தான்
மாசுண வாயின் மலைறப்புற்ருன் - றேசினு
லுற்பவமா முள்ளத் திருளொழியா னெருருவன்
றற்பரனு வல்லனே தான். (எஅ)

சோமவாதம்.

போதல் வருதலுளன் பூரணனு மல்லவிவன்
பாதிரா டோன்ருன் பகலவன்ருன் - சோதியா
யிந்திர சால விருளொழியா னென்னலாற்
சந்திரனு லென்செயலாந் தான். (எக)

ஊழ்வாதம்.

தனுகம் வினையே தரில்வினைதான் செய்ய்
முனுக முளதாய் முடியு - மனுதியெனி
லெஞ்ஞான்று முத்தி யிலதாகு மிவ்வூழிற்
கஞ்ஞான மாகு மடி. (அ0)

மந்திரவாதம்.

மந்திர மானதெலாம் வார்த்தையே யவ்வார்த்தை
யந்தர வானின் குணனதுவே - வந்து
பலியா தருள்குருவைப் பாவியா னுகில்
வலிதா னவன்றன் வலி. (அக)

மருத்துவாதம்.

மருந்தா னெருவரிம் மாநீ ருலகத்
திருந்தா ரெனக்கண்ட தில்லை - வருந்துவதேன்
யார்க்கு மழிவு விளைப்பதாம் யாக்கையெனு
நீர்க்குமிழி பூண்கட்டி நீ. (அஉ)

### சாதிசங்கற்பம்.

ஆதிபே தந்தா னிலாமை யறிந்தவர்கள்
சாதிபே தஞ்சிறிதுஞ் சாற்றுவரோ - சாதிகுல
நல்லார் தொழத்தக்க ஞான முடையவரோ
யல்லா ரிழிகுலத்தா ராம். (அரு)

### தீர்த்தசங்கற்பம்.

அறன்சாரா வுள்ளத் தறியா வழுக்குப்
புறன்சாரு நீராலே போமே - திறன்சாரா
வோடுந்தீர்த் தந்தா னுடற்கே யுளம்விளங்க
வாடுந்தீர்த் தந்தா னறிவு. (அச)

### அருச்சனுசங்கற்பம்.

சலமுழுகி நீர்தேடிப் பூத்தேடிச் சாணி
நிலன்மெழுகி யர்ச்சியா நிற்பர் - புலமிலவ
ருள்ளத்தே நின்ற வுலப்பில் பரமானந்த
வெள்ளத்தே நின்று விடாய்த்து. (அரு)

### அத்துவாசங்கற்பம்.

இந்நெறி யிந்நெறியென் றெம்மார்க்க மும்பகர்க
வந்நெறி யெல்லா மறிந்தவறி - வெந்நெறியா
லெய்தலா மந்த நெறியென் றறைந்தமறை
மெய்தலா வீட்டி னெறி. (அசு)

### சாத்திரசங்கற்பம்.

ஓது முறையின் பொருளுணர்ந் துள்ளபடி
போத மறியாப் புலவர்நூ - லோது
மொருகோடி நூரு யிரத்தானு முண்மை
யருகூடு போகா ரவர். (அஎ)

## பிரமாணசங்கற்பம்.

அறியப் படுமளவை கொண்டளவை யெல்லா
மறியக் கடவ வறிவை - யறிய
விருப்புற்றிடுவான் விறகதனைக் கொண்டு
நெருப்புச் சுடுவா னிகர். (அஅ)

## தர்க்கவாதம்.

தர்க்கநெறி வென்றக்காற் றம்ப மிகப்பெருகுந்
துக்க மிகப்பெருகுந் தோற்றக்காற் - றர்க்க
நிலைபெறுவ தொன்றல்ல நெஞ்சுகன்றக்கத்துந்
தலைபறியே யெய்துபயன் றான். (அகூ)

## வாதத்தொகுதி.

உரைத்த துரையா துரைக்குஞ் சமயம்
பரத்தை யறிவுற்ற பான்மை - மரத்தி
னவயவத்தி னேரொன் றறிந்தார் மரமா
வவயவத்தைக் கொண்டவா றும். (கூ0)

## கேடுகண்டிரங்கல்.

கருத்துகட் டோய்க் கதிபலவா வீச
னுரைத்ததென் றென்றுணர வொட்டா - புரித்திங்
கிலதுள தென்னு முளதில தென்னுங்
கலதியர்க டஞ்சமயக் கத்து. (கூக)

## நன்னெறி.

எய்த வெளிதா மிறையரு ளில்லையே
லெய்த வரிதா மியாவர்க்கு - மெய்தெளிந்தா
லெம்மார்க்கத்தோடு மிகலற்றிருக்குமதே
சன்மார்க்க மாகுநெறி தான். (கூஉ)

## அட்டாங்கயோகம்.

இயமநியமாதனம் வாயு விசையங்
கமையுறு பிரத்தியா கார - மமைவுறு
தாரணை தக்க தியானஞ் சமாதியென
வேரணியும் யோகங்க ளெட்டு. (கங)

ஏம முறுமியம மீனாந்திவைதன்னிற்
றூய்மை யருளூண் சுருங்கற் பொறைசெவ்வை
வாய்மை நிலைமை வளர்விப்ப மாற்றுவ
காமங் களவு கொலை. (கச)

வாய்மை யெனப்படுவ தியாதெனின் வாய்மையினத்
தீமை யிலாதவெனச் செப்புவர்க - ளேமைமிக
வோதும் பரமா முலப்பிலா வொன்றென்பர்
வேத முடிவுணர்ந்தோர் மெய். (கரு)

மம்மர்செய் யாமை வதையாமை யெவ்வுயிர்க்குந்
தம்முணர்ந்தோர் தம்மை வதையாமை - தம்மை
யெறிபடை கானீ ரெரியிற் படாமை
யறிகை யெனவறிவ ரால். (கசு)

மதுகையில் வஞ்சனையி லோர்பொருளை வெளவு
மதுகள வென்ப ரறிஞர் - மதமோதிற்
றன்னதல் லாத வுடம்பைத் தனதுதா
னென்னல் களவாகு மென்று. (கஎ)

அரிவையர் தம்மை யணுகாமை யாகும்
பிரம சரிய மதினும் பெறுதற்
கரிய பிரமத்தொன் றுனூர் பிரம
சரிய முடையவரோ தான். (கஅ)

தாயோடு தந்தைமகத் தாரந்தான் சத்துருவாந்
தீயவனு நேரொக்கக் காணுமது செவ்வையாந்
தூய நிலைமை சுருதி நெறித்துணிவு
தாயர்போன் றன்பு தயா. (கக)

மிகைசெய்தார் தம்மைத்தாம் வென்றுவிட வேண்டி
விகல்செய்யா தென்றும் பொறுக்க - விகல்செய்யிற்
கோபத்தை யொன்றையுங் கொல்க வதுவல்லா
ளுபத்தை யெல்லா மறும். (க00)

அற்புத யோகிக் கனுகூல மானவூ
ணற்பவூ ணுவ தெனவறிக வாடுகின்ற
பொற்புறு நீரிற் புறந்தூய்மை யுட்டூய்மை
சிற்பொருளா லுள்ளத் தெளிவு. (க0க)

நியமம்.

தவஞ்செபஞ் சந்தோட மாத்திகந் தானஞ்
சிவன்றரு நல்விரதஞ் சித்தாந்தக் கேள்வி
யுவந்த சிவபூசை யொண்மதிநாண் பத்து
நிவந்த நியமங்க ளாம். (க0உ)

தவநோன்பா லூண்சுருக்கித் தம்முடம்பை வாட்ட
லெவனுன் பிறவியெனக் கெய்திற் றெத்தாலே
சிவமான முத்தித் திறனேதென் றோர்தல்
பவமாறப் பண்ணுந் தவம். (க0ங)

கூடியது கொண்டமைதல் சந்தோடங் கோகநக
நாடுமுதலா நவில்கின்ற வெப்பதமும்
வீடிப்பரமுளத்தே மெய்காண் மகிழ்ச்சிசந்
தோட மெனுஞ்சுருதிச் சொல். (க0ச)

ஆத்திகம் வேதநெறித் தோற்றமா மாதரத்தோ
டீத்தல் பயன்கருதா தீகையாங் - காத்திரத்தால்
வந்தித்தல் வாயார வாழ்த்தன் மனத்திறையைச்
சிந்தித்தல் பூசை செயல். (க0ரு)

பிரமந்தா னுய்த்தெளியப் பேசுமறைக் கேள்வி
திரிவன்னத் தோர்கட்குஞ் சித்தாந்தக் கேள்வி
புரையில்புராணந்தான் பொய்யிலாமாதர்
சரதவேளாளர்க்கு மாம். (க0சு)

மந்திரந் தாரக மாதியா மன்னிருடிச்
சந்த மதிதெய்வந் தான்கொண்டு - முந்தி
யுரைவாய் துடியுள்ள லொன்றிற்கொன் ஞேரா
யிரமாம்பயனுண் டிவை. (க0எ)

வெருதே யரிதெனினு மென்மேல் விருப்ப
மருதே யிதுவே யறம்பொரு ளின்ப
மிருதானவீடு மெனக்குரவனேவன்
மரு செயன் மாவிரத மாம். (க0அ)

ஆசின் மறைநெறியி னுதரவு தான்மதியாம்
தேச வழகிற் சிறந்த மறைநெறியி
லாசிதுவென்னுங் கருமத்தருவத்துக்
கூசுது நாணமெனக் கொள். (க0கூ)

ஆதனம்.

பத்திரங் கோமுகம் பங்கே ருகஞ்சிங்கஞ்
சொத்திகம் வீரஞ் சுகாதனம் - முத்த
மயிலா சனத்தண்ட மாயோ கியர்கள்
பயிலா சனங்களிவை பத்து. (கக0)

செவ்வே யுடலுங் கழுத்துஞ் சிரமுமுற
யெவ்வா தனத்தே யிருந்தவர்க்குங் - கைவந்து
வாத முதனோய் நலியா மதியுடையோ
ராதன மென்ப தது. (கசக)

பிராணாயாமம்.

வாங்கிப் பதினாறு மாத்திரை நான்மடங்கு
தாங்கித்தற் பாதி தனைவிடக் கால்வலத்தால்
வாங்க லிடத்தி லிடத்தே வலத்தில்விட
வோங்கார முச்சரித்துக் கொண்டு. (கசஉ)

பிரத்தியாகாரம்.

ஒருக்காலு முள்ள முபாதிவே றுகப்
பிரித்துணர்வைக் காண்டலும் பின்னவுபாதி
களைத்துப் பருகிவெறுங் கண்ணுக் குதலும்
பிரத்தியா காரமெனப் பேசு. (கசங)

தாரணை.

ஆய வுடம்பனைத்து மைம்பூதத் தேவைத்து
மாயையி லேவைத்த மாபூத - மாயை
பரத்திலே வைத்துப் பரமேதா னாகத்
தரித்தலே தாரணை தான். (கசச)

தியானம்.

பொருளின்மை காண்டல் புலத்தியான முள்ள
பொருணினைதல் புத்தித் தியானம் - பொருளறிந்த
போத மறிதல்போ தத்தியானம் போதமே
யாதல் பரத்தியான மாம். (கசரு)

சமாதி.

காய முதலையா காயா தியிலழித்து
மாய விருளினவை மாள்வித்து - மாயை

யொருக்கித்தன் னூற்று னுளபரத்தோ டொன்று
யிருக்கை சமாதி யியல்பு. (௧௧௬)

அணிமாதிபலவிகழ்ச்சி.

நல்லவியோ கெட்டு ஞானத்திற் கங்கமெனுச்
செல்வ மணிமாதி சிந்தைசெய்வார்க் - கல்ல
லிரும்பின் சுவர்கரும்பின் கோலா லிடந்து.
விரும்பித் தவிடெடுப்பார் வேறு. (௧௧௭)

ஈருடல்.

வேய்ந்ததோல்சோரிதசை வெள்ளென்புமச்சைசிரை
சேர்ந்த திரளே தேகமா - மேய்ந்த
வகனூற் கரணமீ ரைம்புலன் வாயு
பகர்சூக்கம் பத்தொன் பது. (௧௧௮)

பஞ்சகோசம்.

அன்னம் பிராணன்மனஞான மானந்த
மென்னுங்கோ சங்க ளிவையைந்தும் - பன்னுங்
கிரமத்தாலொன்றிற்கொன்றுள்ளாகுங்கேடில்
பிரமத்தாலாகுநிலைபேறு. (௧௧௯)

பஞ்சாசயம்.

பந்திக்கு மாமாசயம்பக்கு வாசய
மந்த மலமுவர்நீ ராசயங்கண் - மைந்த
ருறைதரு கெர்ப்பா சயமென் றுடற்கே
யறைதரு மாசயங்க ளைந்து. (௧௨0)

ஈரேழுநாடி.

ஈரேழு நாடி யிடைபிங் கலைசுழுனை
வாருணைநாப்பூடா வயிரீ யலம்புருடை

காந்தாரிபைசுனிசங்கினியத்தி
சிகுவைகுகுபுருடன் கூ. (கஉக)

## ஈரேழுவாயு.

பிராண னபான னுதானன் வியான
னராவிசையன்றேவதத்தனுமை - கிருதரனே
அந்தரியாமி முகியன் பிரவஞ்சன்
வைரன் சமானன் வளி. (கஉஉ)

## ஷடாதாரம்.

மூலாதிட்டான மணிபூரகம்விசுத்தி
யேலுமனாகதமாஞ்ஞை யிருமூன்றின்
மேலாதாரத்துமதிவெய்யோன்விசுத்தியிற்றீ
மூலாதாரத்துறையமூண்டு. (கஉஙு)

## அஷ்டவிகாரம்.

உன்னவருங்காமகோபமுலோபமுடன்
மன்னுறுமோகமத மாச்சரியந்
தன்னைமிகமதிக்குந்தம்பம்பொருமையென்னு
மின்னல்விகாரங்களெட்டு. (கஉச)

## ஷட்பாவனை.

ஒன்றிற் பிறத்த லுளதாத லோங்கிவள
ரன்றிப் பருத்த லறத்தேய்தல் - பொன்ற
லெனுமாறு பாவமு மிவ்வுடற்கே ஞான
கனமாந் தனக்கில்லை காண். (கஉரு)

## சட்கோடி.

வீடுபற் றில்லை பிறிதொன்றி னாற்றன்னை
வீடுபற் றில்லை பிறிதொன்றைத் தன்னாலும்

வீடுபெற் றில்லைதன் ஞற்றன்னை யிவ்வாறு
கோடியு மில்லை தனக்கு. (கஉசு)

சடனம்.

அன்னபா னங்கள் பிராண னதேயாகு
மன்னுமகிழ்வு மடிவு மனத்தன
வின்னலா மூத்த விறத்த லியாக்கைய
ஞன்னுக்கு நாடிலி லது. (கஉஎ)

முக்காரகம்.

மயலுடல் வாக்கு மனனென்று மாந்தர்
துயருறு மின்பமுந் துன்பமுந் துய்க்கச்
செயலுளா சிந்தனை தீமையு நன்று
முயல்வன காரக மூன்று. (கஉஅ)

மும்மலம்.

உருவுணர வொண்ணு வகையுணர்வை யொன்றி
மருவிய வாணவ மாயை - கருமங்கண்
மூக்குந் தவிடு முமியு மிவையாக்கை
யாக்கும் பவவித்துக் காம். (கஉகூ)

முக்குணம்.

சுத்தமாஞ் சாத்திகமுந் தூய்மை யிருமதமு
மத்திம ராசதமு மாந்தர்க்கு - நித்த
மறிவறி யாமை யவற்றின் புணர்ச்சி
குறியுடைய மூன்று குணம். (கநூ0)

முப்பிணிக்குணம்.

நீதி கருணை நிலைமை யளிமானம்.
போத மவை யின்மை போரிற் புறங்கொடுத்தல்
மேதக் கவர்பழித்தல் வேண்டா தவைபிதற்றல்
வாதக் குணஞ மதி. (கநூக)

அறிவுடைமை யைந்தடக்க லாகத் தழகு
நெறியுடைமை சொல்வண்மை நீர்மை - பெறவரிய
வத்து விதஞானத் தாதரவா மாண்மை யிவை
பித்தகுண ணுவதெனப் பேசு. (௧௩௨)

பொறிபிற ழாமை புகழ்கருணை யூக்கங்
குறிமதுகை கோப மிலாமை - பொறையோர்
நியமின் றியவீகை நெஞ்சத் துவகை
கபமொன் றியகுணஞ் காண். (௧௩௩)

## முத்துக்கம்.

ஆதிபௌ தீகமாதி தெய்விக மான்மிகமென்
றோது துயர்மூன்றி னுட்க வரு மிடியின்
வாத மழைவேனில் வன்னி பனியாதி
பௌதிக மாகும் படர். (௧௩௪)

வாயு முதனேவு மானுடர் மாப்பறவை
பேயசுரர் நாகத்தார் பீடையாங் - காயத்தின்
மானஞ் சினமவா மாச்சரிய மாதிமனத்
தானதுய ராதியான் மா. (௧௩௫)

இடனில் கருப்புகுத லீங்குப் பிறத்த
னடையுடன் மூத்த னரைத்தன் - மடமை
நினைவறச் சாத னிரையம் புகுத
லனையவை தெய்விக மாம். (௧௩௬)

## மூவேடணை.

மகப்பற்ற தாகும் வருஞ்சுற்ற மெல்லாஞ்
சகப்பற்றுச் சங்கற்ப மெல்லா - முகப்புற்ற
வெப்பொருளு மத்தப்பற் றிவ்வே டணைமூன்றும்
மெய்ப்பொருள் கண்டால் விடும். (௧௩௭)

மூவவத்தை.

காணுமது நேரோ நனவா நிலைபேறு
காணாமை காணு மதுகனவா மொன்றையுங்
காணு தொழிகை சுழுத்தியாங் காணாமை
காணுங்கட் கில்லை யவை. (கஙஅ)

நாற்கரணம்.

ஐய மனனு மபிமான மாங்கார
மையலற வேதுணிதன் ம்மாமதியாஞ் - செய்ய
வருசிந் தனைசித்த மாகு மவையே
யொருநான்கா முட்கரண மொன்று. (கஙக)

ஐம்பூதம்.

காசினிநீர் தீகால்வான் கந்தஞ் சுவையொளியூ
றோசைமா பூத முறுகுணங்கள் - மாசில்
செவிமெய்வாய் கண்மூக்குச் செப்பியநுண் பூத
மவையறியு மைம்புலன்க ளாம். (கசo)

ஓதுகுணம் வான்முதலா வொன்றிற்கொன் றேறுமுனா
யீத னடைபோக் குதலின்ப - நீதிவாய்
கையொடுகால் பாயு ருபத்தங் கருமங்கள்
செய்யும் புலனுகச் செப்பு. (கசக)

பூதநிறம் பொன்வெண்மை செம்மை கருமைபுகை
யோது முருவ மதற்குரைக்கில் - நீதி
சதுர மதிபாதி மூன்றுறு கோண
மதியமாம் வட்டமவை யாம். (கசஉ)

உண்ணிலை.

புத்திகருமப் புலன்பத் ததின்விடயஞ்
சத்த வசனுதி தான்பத்துச் - சித்த

மகமான வன்னுன் கறிவா னொருவ
னகமா கியவிருபத் தைந்து. (கசங)

புறநிலே.

தசைமயிர்தோ லென்புசிரை தண்ணிணநீர் மூளே
யுதிரம் பெலம்பசி தாக முறக்க
மிதுன மறப்பிருப்பு மேலோங்க லோடல்
கதிகிடத்தன்மானபயங்காதல் கதநா
ணித மாம்புறத் திருபத்தைந்து. (கசச)

இருபத்தெட்டு.

விகுதி யிருபத்து மூன்றும் பகுதியு
நாலாறு கண்ட புருடனுங் கால
முயர்ந்த வியோமம் வியோமா திதமென்
றியம்பு மிவையிருபத் தெட்டு. (கசரு)

தத்துவமுப்பத்தாறு.

தலமுதலான் மாவீறு சத்திசிவம் வித்தை
சலமில் சதாசிவ மீசன் - கலேமாயை
யேறுவிச்சை கால மிராக நியதியையைந்
தைந்தாறசுத்தஞ் சுத்தம். (கசசு)

தத்துவந்தொண்ணூற்றாறு.

பூதநிறங் கோசம் புறநிலேயு முண்ணிலேயும்
வாத விகார மலங்குணங்க - ளாதார
மேக புருட வினேய னெஞ்சவத்தையென
வாக விவைதொண்ணூற் றாறு. (கசஎ)

தத்துவநிச்சயம்.

உலவாத தத்துவத்தி னுண்மை யுணர்ந்தா
லிலவா மிவையியம்ப லென்னே - பலவாக

கண்ணிலவு மாசுடையார் கண்டாற் பலவாமோ
தண்ணிலவொன் றல்லவோ தான். (௧௪௮)

## குணசம்பந்தாவவத்தை.

முத்திற ஞனகுணத்தன மூன்றவத்தை
யுத்தமமாஞ் சாத்திக மாமுணர்ச்சி தான்கனு
மத்திம ராசத மாண்ட சுழுத்திதா
னத்தம தாமதம தாம். (௧௪௯)

## அவத்தாந்தரவவத்தை.

நனவு முதலவத்தை நாலவையோ ரொன்றின்
நனவு முதனாலுங் கண்டார் - கனவா
நனவு முதனாலுங் காணார்கள் காண்பர்
நனவாக ஞானக னம். (௧௫0)

நனவி னனவு புலன்வழக்க மாகு
நனவிற் கனவு நினைவா - நனவில்
மனநினை வின்மை சுழுத்திநினை வின்மை
தனைநா டுதுரியந் தான். (௧௫௧)

கனவி னனவுபோற் காண்ட னனவாங்
கனவினிற் கண்டு மறத்தல் - கனவாங்
கனவிற் சுழுத்திகா ணமைகாண் பானை
யனுமதித்த லாமற் றது. (௧௫௨)

சுழுத்தி நனவொன்றுந் தோன்றுமை தோன்றல்
சுழுத்தி கனவாஞ் சுழுத்தி - சுழுத்தி
யரிய வறிவா லழிக்கை சுழுத்தி
துரியமாஞ் சொல்லிறந்த பாழ். (௧௫௩)

துரிய நனவா மிதமுணர்ந்த போதந்
துரிய கனவா மகமுணர்ந்த போதந்
துரியச் சுழுத்தி வியோமந் துரியத்
துரியம் பரமாகச் சொல். (கருச)

ஆதாரபேதாவவத்தை.

சந்தித் திடம்புருவந் தன்னினிலே சாக்கிரமாங்
கந்தரத்தினிற்கை கனவாஞ்சுழுத்தியா
விந்த மெனுமிதய மேவலா முந்திக்கு
நால்விரலி னுலா வது. (கருரு)

கரணபேதாவவத்தை.

நனவிற் பதினுற் கரணமு நான்கு
கனவிற் சுழுத்தி கருத லறமூன்றுந்
தனதாகை வேருகை தான்றுரிய மற்ற
தெனதுயா னற்ற விடம். (கருசா)

அவத்தைக்கழிவு.

ஒருக்க நனுப்போங் கனுப்போ முளத்தை
தரிக்கத்தற்றியானத்திற்றற்சுழுத்திபோகு
மரிக்குஞ் சமாதி துரிய மதீதம்
புரித்துப் பரம்விளங்கப் போம். (கருஎ)

தரிசனுவத்தை.

சுழுத்தி நனவின்வரிற் தோன்றுயிடுஞ் சீவன்
பழிப்பி னதீதத்திற் பரமன் - விழித்தவனேற்
றீதொருங்கவாண்ட குரவன்றிருக்கோல
மேதொருங்கித் தோன்று மென. (கருஅ)

மாவாக்கியம்.

அதுநீயா னுயென்னு மப்பதங்கண் மூன்றி
னதுவென் பதுபிரம நீயென் பதுசீவ

ஞனு யெனும்பதந்தா னவ்விருவ வாக்கியமா
மூனு முபாதி யொழித்து. (௧௫௯)

## ஓங்காரம்.

புகலு மறையவத்தை காலம் புவன
மிகலுகுணந் தியிறைவர் செய்கை - தகவே
யகார வுகார மகார மதனுற்
சகலமுந் தாரக மாம். (௧௬௦)

## அசபை.

அஞ்ச வுருவிருபத் தோரா யிரத்தறுனூ
றெஞ்ச லறநின் றியம்பாமற் ருனியம்பித்
தஞ்சப் பிரமத்திற் முன்வேறன் றென்னுமதே
துஞ்ச லொழிக்குந் துணை. (௧௬௧)

## ஸ்ரீபஞ்சாக்ஷரம்.

சிவமுதற் றத்துவங்க டேவதைகள் செய்கை
யவனிமுதற் பூத மவத்தை - புவனங்கள்
கோசம் பொறிபுலன்கள் கூறுங் கரணமெலா
மீசன் றிருவஞ் செழுத்து. (௧௬௨)

## ஸ்ரீஅஷ்டாக்ஷரம்.

நாராய ணய நமவென் பொருள் சீவ
னேரா ரிறையேக மென்றறிகை - பேர்வேறு
காரண காரிய காயத்தா னென்றுகும்
பூரண போதப் பொருள். (௧௬௩)

## வாக்கியவிவேகம்.

ஊக்கி யறுதியிட வொண்ணு வொருதன்னைப்
போக்கி யிலாத பொருடா னருளாலே
பாக்கியத்தால் வந்து பலிக்கி னலதில்லை
வாக்கியத் தார்காணு மாறு. (௧௬௪)

## சீவபரவேறுபாடு.

அறிவா னறிவனென வாகத்தே சீவ
னிறையோனென் பாருண் டிருவர் - பிறியாச்
சுபாசுபங்க ளாலிவரைச் சொல்லவரு பேத
வுபாதிகளா னல்லதுரு வொன்று. (௧௬௫)

## சீவலக்ஷணம்.

இதமக மெய்து மிரண்டு தொழிலு
மதிய தவையறிந்த மாத்திரமே சீவ
னிதன பவங்க டனக்கில்லை நித்து
னதனை யறியா னவன். (௧௬௬)

## பரலக்ஷணம்.

எப்பொருட்குங் காரணமா யெப்பொருட்கு மீசனு
மெப்பொருட்குந் தோற்ற நிலையிறவா - யெப்பொருடா
னல்லா திலதா யகமும் புறமுநிறைந்
தெல்லா மறிவா னிறை (௧௬௭)

## சீவபரவேறின்மை.

உபாதி யொழிந்தா லுயிர்பரங்க ளொன்றே
சுபாசு பராய்நின்ற தோற்ற - முபாதி
கடாகா யமாகாயம் வேறுகக் காண்கை
யடாகா ணறிவொன்றே யாம். (௧௬௮)

## மாயாவிவேகம்.

அறியாத மாயைக் கடியறியத் தேடி
னறிவா லறியவொணு தாகு - மறியாமைக்
கேதுவறியி லறிவா லிருட்கேது
சோதியைக் கொண்டறிந்து சொல். (௧௬௯)

## உலகவிவேகம்.

போதக்கண் பூதங்கள் பொய்யா மவைமெய்யாம்
பேதக் கடாதிப் பிறழ்வுகளிற் - பேதங்கள்
சுத்திகையின் வெள்ளியின்மெய் தோன்றப் படுங்கனவு
நித்திரையைப் பாரந் நிலே. (௧௭0)

அயலாக மெய்போ லசந்தபே தத்தை
மயலாகக் கண்டமா மாயத் - துயில்போனு
லெண்படு மிவ்வுலக முண்டாமா றெங்ஙனே
கண்படைபோ யுண்டோ கனு. (௧௭௧)

வன்னி யிருக்கமரம் வன்மிகையூ ஞனதே
தன்னிகழ்ச்சி யின்றேலித் தன்மையா - ஞன்ஞன
தன்னிகழ்ந்தா லுண்டோ சகத்துன்பஞ் சற்குருவால்
வன்னிகண்டா லுண்டோ மரம். (௧௭௨)

## ஞானமுதன்மை.

யோகாதி மூன்று முணர்வதனுக் கங்கமா
மாகா தெனிற்பதங்க ளாயழியுந் - தேக
மொழிய வருமுத்தி யொன்றுதற்கு ஞான
விழியையல தில்லே வேறு. (௧௭௩)

## ஞானலக்ஷணம்.

பொறிவா யறிபுலன்கள் போதக்கரண
வறிவான வெல்லா மடங்கி - யறிவா
யறிவா னறிவ தறியும்பொருளென்
றறியா தறிவ தறிவு. (௧௭௪)

## ஞானப்பெருமை.

அலேயிலே கன்ம மடியிலே யாக்குந்
தலேயிலே ஞானந் தரிக்கு - மலேயா

தருமறை நூலே யறியுஞா னத்தின்
பெருமை யறியார் பிறர். (கஎரு)

ஞானபூசை.

இன்பக்கண் ணீராட்டி யேத்தி யெழின்மலரா
வன்பிட்டுத் தம்மை யமிர்தாக்கி - முன்புற்ற
சிற்சட மெல்லாஞ் சிவமாக நோக்கல் சிவற்
கர்ச்சனை யாகு மது. (கஎசு)

ஞானயோகம்.

யோகத் தபாவமெனும் யோகமது கைகூடி
னேகப் பொருளதனு னெய்திடு - மேக
மதுவா மிதுவன் றெனுவகண்ட மான
வதுவாகை மாயோக மாம். (கஎஎ)

ஞானவலி.

புணர்பாவ புண்ணியங்க ளெண்ணிறந்த தெல்லா
முணர்வா மெரிகொளுவி னுண்டோ - வுணராமை
கூடவெந் தேருத துண்டோ குழைந்தமரங்
காடுவெந் திப்பட்டக் கால். (கஎஅ)

யோகநழுவுதல்.

யோகத்தா லேகத்தைக் கூடாதிடையி னுயிர்
போகிற்றுன் பொல்லா வுலகிற் புகாநல்ல
யாகத்தா னெய்து பயனெல்லா மெய்திப்பின்
யோகத்தான் முத்தி யுறும். (கஎகூ)

ஊழ்வலி.

தந்த வறியாமை போகவுந் தான்போகா
திந்தவுட னிற்ப தென்னென்னி - னுந்துங்
குசவன்கை விட்டாலுங் கூடா திகிரி
விசைவந் திடாதே விட. (கஅ0)

## முத்திசாதனம்.

தருபயன் வேண்டாத் தருவினைகள் சாந்தி
சுருதிகள் கேள்வி துறவி - குருவைப்
பெறுதற்கிங் கேது பெறற்கரிய முத்தி
யறிதற்கிங் கேது வவன். (௧அ௧)

## ஆசாரியலக்ஷணம்.

சிறையா முடன்முதல் சித்தமீ ருக
விறையோனே யானல்லே னென்று - மறைநீ
யதுவாகு யென்ற தெதுவானே னென்று
விதுநீகா ணென்பா னிறை. (௧அ௨)

## ஆசாரியன்மகிமை.

உள்ளந் தனினின் றொளித்தான்பரன் குரவன்
கள்ளந் தனைத் தவிர்த்துக் காட்டினன் - வள்ள
லருவான கோலமோ வக்கோலங் காணக்
குருவான கோலமோ கூறு. (௧அ௩)

## அநாசாரியலக்ஷணம்.

துயிற்புணர்ப்பாற் சொர்ப்பந் தொடுகடனீ ராமை
மயிர்ப்படா மின்மினியின் வன்வீ - முயற்கோ
டெருத்தின்பான் மெய்யுணர் வில்லாதான் பண்ணுங்
குருத்துவமு மேராகக் கொள். (௧அ௪)

## பக்குவலக்ஷணம்.

காய நிலையின்மை கண்டான் கருத்துச்செந்
தியினடு வுற்றான் சித்தஞ் சினவரவின்
வாயுறு மண்டுகத்தின் னெஞ்சம் வரியுழுவை
தாயவ னுள்ளஞ் சமம். (௧அ௫)

## அபக்குவலக்ஷணம்.

தம்பாற் றவந்தூய்மை வாய்மை தயாவிலா
ரும்ப னடிபேணு ருள்ளபொரு - ணம்பார்
பொருள்செய்ய வாதரிப்பார் போகநினைவா
ரருள்செய் யலாகா தவர். (௧அ௬)

சித்தியா நிற்குஞ் சிலர்க்கு விபரீதப்
புத்தியா குஞ்சிலர்க்குப் போதமே - சுத்தமாம்
பானீய மொன்றேனும் பாம்புண்டா னஞ்சீனு
மானீயு நல்ல வமிர்து. (௧அ௭)

## சிஷசரிதை.

கழல்போற்ற வாயாரக் கண்மல்க வுள்ள
மழல்சேர் மெழுகி னழிவெய்த யாக்கை
யெழில் சேர் குருபரன்றன் னேவலே செய்க
நிழல்போல முன்பினு நின்று. (௧அஅ)

சந்தனந் தாம்பூலந் தாரத னஞ்செயன்
மந்தனம் பொய்வெய்ய மாற்றங்கள் - சிந்தைக்
கரவபி மானங் கலூழ்ச்சிசளிப் பின்ன
குரவன மேவாது கொள். (௧அ௯)

## சம்பிரதாயலக்ஷணம்.

அங்கையுற்ற நீராக்கொண் டாக்கை பொருளாவி
பங்கயக்கண் ணுற்கொண்டு பண்டைவினைச் - சங்கையறப்
பூத மலமுழுதும் போத மெனநிகழ்த்தப்
பாதமலர் வைத்தான் பரன். (௧௯0)

## ஊனுயிர்வேறுபாடு.

ஆக்கை முதற்சித்த மீருக வெப்பொருளு
நோக்குமவன் றன்னை நோக்கா - தவைசடமாச்

சாக்கியா நின்றவவன் சற்குருவாய் வந்தபரன்
வாக்கில் வெளிப்படுங்காண் வந்து. (௧௧௧)

கலைக்கட்டளை முற்றிற்று.

---

## அநுபவக்கட்டளை.

### சிவதரிசனம்

போக்கு மனனொருக்கிப் போதமங் கில்லாமை
நோக்கிய நோக்காலந் நோக்கத்தை - நோக்கென்றுன்
றூன்றூத வண்ணம்போய்த் தஞ்சிற் றிருளறிவா
சான்றுகி நின்றேனுன் றுன். (௧)

வினைப்பய னென்னையினி மேவாவிண் ணூதி
யனைத்து மழிந்து மழியே - னெனக்கின்று
முன்பக்கங் கீழ்மேன் முதலிடையீ றென்றனவு
மென்பக்கற் காணே னியான். (௨)

இல்லாது முள்ளது மெல்லா மறிவேனு
னெல்லாப் பொருள்கட்கு மேதுநா - னெல்லா
வுலகும் படைத்தழித்துக் காத்துணர்வா யொன்று
யிலகும் பரமீசன் யான். (௩)

### துரியதூஷணம்.

விரிந்தா லுலகறியு மேனேக்கா துள்ளே
புரிந்தாற் றனையுணரும் போத - மருந்தவா
மாட்சி யுடைய பரமெனவோ மற்றிதன்
காட்சியு மாட்சியுங் கண்டு. (௪)

கரணங்க ளிற்கலந்து காணுமை நின்றுன்
கரணங் களையொருக்கிக் கண்டான் றனைத்தான்

கரணியாய் நின்ற விவனதே கண்டாய்
மரணம் பிறப்புற்ற மால். (ரு)

அதீததரிசனம்.

அறிவென் பதனு லறியும் பொருளு
மறிவு மறிவானு மாகும் - பிறிதின்றிச்
சொல்லாட லில்லாத் துரியாதீ தம்பிறக்க
வெல்லா மவிழவிரு. (சு)

தேய்ந்து தெரிவு தெரியாமை யென்பதற
மாய்ந்த தெனவும் வகையில்லை - மாய்ந்ததுவும்
போந்த விடத்தே புகலு மிஃதொழிய
மாய்ந்த விடத்தில்லை மற்று. (எ)

வியோமதூஷணம்.

அடங்குகை யாலே யதீதமு நின்னை
மடங்கொள் சுழுத்தியை மானுந் - திடங்கொள்ள
நில்லாக் கனவே துரிய நிலையிரண்டு
மல்லாமை யாலவத்தை யாம். (அ)

பரதரிசனம்.

அதீதம் பொருளென்ற லப்பொருளே தென்று
னதீதம் பொருளா வறிந்த - புதனொருவ
னுண்டாங்கா ணென்றுன் றுரைத்தா னுரைத்தலுமே
கண்டா னதுகாணுங் கண். (கூ)

பிறிதற் கறிவிருந்த பெற்றியே னென்ன
வறிவிற் கறிவா விருந்த - வறிவை
யறிவே யறிகின்ற தன்றி யறியப்
பிறிதேனு மில்லை பிறழ்வு. (க0)

அகமிதங்க ளில்லை யறிவயர்வு மில்லை
யிகபரங்க ளென்றறிய வில்லை - சகமும்
மெரியினுக்கு வெம்மையுரு வென்ன விறைவா
வுருவதற்கு நேரே யுணர்வு. (௧௧)

ஐக்கியவிருப்பம்.

பூத மறிந்த வறிவுயிராம் போதமா
யாது மறிந்தவறி வீசனும் - பேதமறப்
புல்லிற்றெங் கேயென்றுன் புத்தேளிர் கோக்கண்ணீர்
மல்கித்தாள் வீழ்ந்தான் மகன். (௧௨)

பின்ன மறிந்தசெயல் போலப் பின்னமே
தன்னை யறிந்ததுவுந் தற்செயலாய் - நின்ன
செயன்மாண் டதுகாண் சிவமென்று நீச
னயன்மா லறியா வவன். (௧௩)

அவாக்கியம்.

ஒருக்கவேறில்லா வுணர்வாம் பரமும்
பருக்க விடயமெனப் பண்ணி - யருட்சொருபன்
பேசா திருவென்னப் பேதங்காணு திருந்தான்
வாசாம கோசரத்தே மாண்டு. (௧௪)

இலங்க வறித னனவாகு மெங்குங்
கலங்க வறிதல் கனவாம் - புலன்கெட்ட
தெல்லாஞ் சுழுத்தியா மிம்மூன் றவத்தையினு
மல்லா ததுகா ணறிவு. (௧௫)

ஊனு முயிரு முணர்வு முடனிறந்து
யானு மிறந்து பரனிறந்து - கோனே
வடிவோது மாறின்றி வாக்கிறந்து நீயிப்
படியே யிருக்கும் படி. (௧௬)

திரண்ட சமவாயந் தீர்பாழிற் சேவ
விரண்டாம்பா ழிற்றேன்று மீச - விரண்டும்போய்
மூன்றும்பா ழிற்றேன்று மூன்றும் பதப்பொருளாஞ்
சான்றுரு மில்லாத் தனி. (௧௭)

சொரூபதரிசனம்.

ஆவபா வாபாவந் தீர்ந்த வகோசரமு
மோவு மவத்தைகளி னென்றுக்கிச் - சீவபரந்
தானற் றிருந்த தனிப்பதங்கா ணீதென்று
மோனத் திருந்தான் முனி. (௧௮)

நோக்கினன் றுனுய் நிகழ நுனிதமறை
வாக்கினற்கூறரிய வான்பொருளை - நோக்கிச்
செயிர்தீர்ந்தே னென்றெழுந்தான் மைந்தன் சினையீன்
றுயிரீந்த மீனதனுக் கொப்பு. (௧௯)

நிறைவுற்ற தெவ்வாறு நின்மலனுந் தன்னை
யறிவித்த வாறறிய லாகா - நிறைய
முழ்த்துமா லானந்த முந்நீரி னுள்ளே
யழுத்துமு மைக்குடத்தி னும். (௨0)

அநுபூதி.

இருந்த படியே யிருந்த படிகாண
விருந்தபடியே யிறைவ - னிருந்தபடி
யப்படியே யென்னு மஃதொழிய வப்படியை
யெப்படியே யென்றுரைக்கே னியான். (௨௧)

ஊனுனு யூனிற் குயிரானு யுள்ளுணர்வு
தானுனுய் போத தமமானு - யானுனு
யென்னுநா டொண்ணு விறையானு யாதுவாய்
நின்னுனு யென்னுனுய் நீ. (௨௨)

காண்டகையே யென்கைக் கடனன்றே யில்லேனின்
ஞண்டகைதான் சூடார்க் கயலன்றே - மாண்டேன்
சயம்புவே யென்னினுனா தானுண்டோ வெவ்வா
றியம்புவே னென்றறியே னியான். (உரு)

நாரணனு நான்முகனு நாடப் பெருரின்ன
மாரணமுஞ் சொல்ல வறிகுதிலே - காரணநின்
செம்மா மலர்ப்பாதஞ் சென்னிப் பொறித்தாய்க்குக்
கைம்மாறு காண்கிலேன் காண். (உச)

ஒல்லை யுலகு படைத்தழிக்க வுன்னுணர்வால்
வல்ல சொருபாவென் வஞ்சமனக் - கல்லைத்
திரித்தருள வேண்டியொரு தேசிகனுங் கோலந்
தரித்தருள வேண்டியதே தான். (உரு)

சொருப வெனக்குன் றுணைமலர்த்தாள் சூட்டித்
திருவரு ணேரொப்போ மன்றோ - வருளாலே
நின்னே ரனையானே நீயுமருளாலே
யென்னே ரனையே னியான். (உசு)

வந்திக்கச் சென்னிவாய் வாழ்த்த மனனுருக
விந்தத் திருக்கோலத் தெம்பெருமான் - வந்தெனக்குப்
பொன்னங் கழலருளிற் பூரணபோ தச்சொருப
வின்னம் பிறப்பே யினிது. (உஎ)

என்கை பணிசெய்ய வெம்பெருமாற் கெம்பெருமா
னென்கை பணியாக வென்வாக்கு - நின்கீர்த்தி
கற்றென்றும் பாடக் கனியமனங் காணிறைவா
மற்றென்றும் வேண்டேன் வரம். (உஅ)

அளித்தான் றிருமேனி யைம்புலனுங் கொண்டு
களித்தான்பே ரானந்தக் கண்ணீர் - குளித்தான்
குளித்தானம் பாலென்றுங் கூர்ந்தன்பான் மீண்டு
மளித்தா னருட்சே வடி. (உகூ)

அநுபவக் கட்டளை முற்றிற்று.

ஆ திருவெண்பா உஉ0.

பதினெட்டாவது

அமிர்தசாரமுற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவாதவூரடிகளாகிய

**மாணிக்கவாசகசுவாமிகள்**

திருவாய்மலர்ந்தருளிய

தமிழ்வேதமாகிய

திருவாசகத்தில்

திருப்படையாட்சியில்

முதற்றிருவிருத்தத்திற்கு

இயற்றமிழாசிரியராகிய

**தி - விசாகப்பெருமாளையரவர்களியற்றிய**

வுரை.

---

ஆசிரியவிருத்தம்.

கண்களிரண்டுமவன்கழல்கண்டு களிப்பனவாகாதே, காரிகையார்கடம்வாழ்விலென்வாழ்வு கடைப்படுமாகாதே, மண்களில்வந்துபிறந்திடுமாறு மறந்திடுமாகாதே, மாலறியாமலர்ப்பாதமிரண்டும் வணங்குதுமாகாதே, பண்களிகூர்தருபாடலொடாடல் பயின்றிடுமாகாதே, பாண்டிநன்னுடையான்படையாட்சிகள்பாடுதுமாகாதே,

விண்களிகூர்வதோர்வேதகம்வந்துவெளிப்படுமோகாதே
மீன்வலைவீசியகானவன்வந்துவெளிப்படுமாயிடிலே. க

என்பது செய்யு ளென்னுதலிற்றோ வெனின் படையாட்சி யோடு பாசறைக்கட்சென்ற தலைவன் சத்தனுதலால் அவன் வருவலென வுரைத்த பருவமும் வந்தது அவனும் வருவன் என்றுற்றுவித்த பாங்கிக்குத் தலைவி அவன் வெளிப்படின் றனக்குளதாம் போகாநந்தப்பேற்றைக் கூறுதலையுணர்த்துத னுதலிற்று.

இ - ள். கலவனுருக்கொடு வலைவீசி மீனினைப்படுத்த சிவ னெனுந் றலைவன்வந்து வெளிப்படினுண் டென்னிரண்டு கண்களு மவன்றிருக்கழல்கண்டு களிப்பனவாகிய நிகழ்ச்சி யுமுளதாகாது. பிரிவறியாது தன்றலைவருடன் புணர்ந்து நிற் குமேனை மாதர்வாழ்வினின்று மென்வாழ்வு கடைப்படுமாறு



மாகாதினி மண்ணுலகத்தினில் வந்து பிறந்திடுமாறு மறந்திடு மாறு முளதாகாது. திருமாலறியாத் திருமலர்ப்பாத மிரண் டினையும் வணங்குகிலமென்று சொல்லுஞ்சொன்னிகழ்ச்சியு முளதாகாது. களிப்பினைமிகத்தரும் பண்ணினைப்பொருந்திய [illegible]டிடுமாறு முளதாகாது. நல்வளநிறை ந்த திருப்பாண்டிநாடதனையே திருப்படைவீடாகவுடையா ன் படையாட்சிகள் பாடுதுமென்று சொல்லுஞ்சொன்னிக ழ்ச்சியு முளதாகா திருமலமுடைய பிரளயாகலர்களிகூரத்த க்கதாக மான் மழு சதுர்ப்புயத்தோடுவந்து வெளிப்படுமாறு வெளிப்படுதலு முளதாகாது. ஆண்டுயான் சிவபோகமென் னுஞ் சிவாநுபூதி சொரூபியாவேனென்பதாம். ஈண்டுதலைவி சீவன்முத்தன். தலைவன் சத்தனுகிய பரசிவன். பாங்கிதிருவ ருளெனவறிக. சைவாகமத்துமுத்தியினு மும்முதலுமுண்டெ ன்பதனுன் முத்தியினுமாண்டா னடிமையிருக்க விவ்வாறு

கூற லாகாதெனின், அறியாதுகூறினுய் மலமாயா கன்மங்க ளோடுகூடித் திரோதப்பட்டுச் சனனமரண முற்றுவருமான் மா விருவினையுமொரு காலத்தேவந்து புசிக்கைக்குச் சமமுற் றவெல்லையிற்போன பலகோடிபவங்களிலே செய்துவந்த ச ரியாகிரியா யோகத்தவப்பயனுன் மலபரிபாகப் பட்டுச்சிவ ஞானத்தைப்பெற்றுத்திருவருடாரகமாகநின்று சீவகரணங்க ளெல்லாஞ் சிவகரணங்களாய்ச் சிவனுேடொன்ருய்ச் சாயுச் சியமாவன்; சாயுச்சியமாமிடத்து வேருய்நின்று கலப்பின் கலத்தல் கூடாமையானும் ஒன்ருய்நின்று கலப்பின்கலத்த லின்மையானும் அப்பொடுகலந்த வுப்புப்போல வேறறநின் று சாயுச்சியமாவன்; ஆனவிடத்து மூன்றுமுதலு மிருக்கினு மவை முன்புபோலச் சீவித்துநிற்பனவுஞ் செய்யாமனிற்கும்; நிற்கவே ஆன்மாசிவனேடு அத்துவிதமாய் நிற்பனுதலா லா ண்டு சிவனையுஞ்சுட்டி யறியா னிதுவிதுவென்று சுட்டியறிய ப்பட்டனவெல்லாம் விடையமாய்ப் பொய்ப்பொருளாமா தலி னவ்வாறு அவைபொய்ப்பொருளென வறிந்தவிடத்தே சுட்டற்றவுண்மையாகிய சிவரூபமாவன்; அங்ஙனஞ் சிவரூப னுன முத்தாத்மாவினுலே யிவ்வாறு சுட்டியறிதலின்ருமாத லி னிவ்வாறு கூறுதலாமெனக்கொள்க. இதனைச் சிவஞான போதம் - அ - கூ - ட - டிக ஆஞ் சூத்திரங்களாலு மிந்நான் கு சூத்திரங்களின் பொருள்களைவிரித்துச் சித்தியார் சிவப்பி ரகாசங்களிற்கூறிய திருவிருத்தங்களாலுமறிக;ஏகாரங்களீற் றசை தேற்றமெனினுமமையும். அன்றி வினுவாகக்கொண்டா மெனப் பொருள்கொள்ளின் காரிகையார்கடம்வாழ்விலென் வாழ்வுகடைப்படுமோகாதேயென்பனதத் திலதருப்பணஞ்செ ய்யல்வேண்டும். இதுமுதலிய பலகுற்றங்களுண்டாம். அவற் றை விரிப்பிற்பெருகுமென்றெழிந்தாம். இச்செய்யுளிற் கூற ப்படுமோகாதென்னு மொழிகட்கு ஆமெனப்பொருள்கூறினு

காதோவெனினுகாது, என்னெனின் யாண்டும் எதிர்மறையை யுடன்பாடாகக் கூறுதற்கிலக்கண மின்மையின். செய்யாயெ ன்னு முன்னிலையொருமை யேவலெதிர்மறை வினைமுற்றை யுடன்பாட்டுவினைமுற்றாகப் பொருள்கொள்ளுதல்போ லிதனையும் பொருள்கொள்ளுதலாகாதோவெனின் ஆகாது; என்னெனின் அதனை யெதிர்மறைவினைமுற்றாகப் பொருள்கொள்ளுமிடத்து எதிர்மறையாகார மிடையிற் புணர்ந்துகெட்டு நின்றதாகவு முடன்பாட்டு வினைமுற்றாகப் பொருள்கொள்ளுமிடத்து அவ்வெதிர்மறையாகாரம் வேண்டாது நிற்பதாகவும் கொள்ளுதலானு மிதனிடத்தில் எதிர்மறையாகாரம் புணர்ந்து நிற்றலினுடன்பாடாகக் கொள்ளுதற்கேலாமையானுமென்க. கண்களிரண்டாவன - ஞானக்கண்ணு மூனக்கண்ணுமாம். ஏனையவற்றை விரித்துக்கடாவிடைகளாகக் கூறுதற்கிஃதிமையமன்றெனவிடுத்தனம்.

முதற்றிருவிருத்த

வுரை முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---